# THAMBIYIN - THIRAMAI


| | |
|---|---|
| Subject : | SHORT STORIES FOR CHILDREN |
| Author : | P. THOORAN |
| Illustrator : | SAGAR |
| Publishers : | PALANIAPPA BROTHERS<br>Madras-5 & Tiruchi-2 |
| Printers : | ASIAN PRINTERS |
| Price : | Rs. 1-50 |
| First Published: | 14—11—63<br>(CHILDREN'S DAY) |

# தம்பியின் திறமை

அண்ணன் தம்பிகள் ஐந்து பேர் தங்கள் தாயோடு ஓர் ஊரிலே வசித்து வந்தார்கள். அவர்களுடைய தந்தை இறந்து போய்ப் பத்தாண்டுகளுக்குமேல் ஆகிவிட்டது. தாய்தான் அவர்களைக் காப்பாற்றி வளர்த்து இளைஞர்களாகச் செய்தாள்.

அந்தத் தாய்க்கு எல்லாக் குழந்தைகளிடத்திலும் அன்பு தான். ஆனால் நல்லமுத்து என்னும் கடைசிப் பையனுக்கு அவள் அதிகமான உரிமை கொடுத்திருந்தாள். அவன் செல்லப்பிள்ளை. அதைக் கண்டு மற்ற நால்வருக்கும் அவனிடத்திலே பொறாமை. அவர்கள் எப்பொழுதும் நல்லமுத்துவைப் பழித்துப் பேசுவார்கள்.

''அம்மா, நீ நல்லமுத்துவைப் பற்றிப் பிரமாதமாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். அவன் மண்டையிலே களிமண்கூடக் கிடையாது'' என்று ஆரம்பிப்பான் எல்லோருக்கும் மூத்தவனான சாமிநாதன். அண்ணன் சொல்லுவது முற்றிலும் உண்மை என்று ஒத்துப்பாடுவார்கள் மாணிக்கம், சுந்தரம், வேலுச்சாமி ஆகிய மூவரும்.

''நல்லமுத்துக்கு மூளையில்லை என்று சொல்லுகிற உங்களுக்குத்தான் மூளையில்லை'' என்று சில சமயங்களில் சற்று கோபமாகவே தாய் பதில் சொல்லுவாள். அவர்கள் நல்லமுத்துவைப்பற்றி இழிவாகப் பேசுவதைக் கேட்டுக் கேட்டு அலுத்துப்போய் அவளுக்கு அப்படிக் கோபம் வருவதுண்டு.

தாய்க்குக் கோபம் வரவர மூத்தவர்களுக்குக் கடைசித் தம்பியிடம் வெறுப்புத்தான் அதிகமாயிற்று. அதைக் கண்டு தாயார் மனம் வருந்தினாள். நல்லமுத்து எல்லோரையும்விடப்

புத்தி கூர்மையுடையவன் என்பதை அவர்களுக்கு நன்ருக விளங்கும்படி செய்து அவனிடத்திலே அன்போடு இருக்கச் செய்யவேண்டுமென்று அவள் ஆசை கொண்டாள்.



அவள் ஒரு நாள் தன் [illegible]து, "உங்கள் எல்லோருக்கும் வயது வந்துவிட்டது. இனிமேல் நீங்கள் கலியாணம் செய்துகொண்டு தனித்தனிக் குடும்பமாக வாழவேண்டியவர்கள். அப்படி வாழ்வதற்கு முன்ஞல் நமது நாட்டைவிட்டு அடுத்த நாடுகளுக்குச் சென்று சுற்றிப் பார்த்து உலக அனுபவம் பெற்று வரவேண்டும். அப்படிச் செய்தால்அறிவும் வளரும். உங்களுடைய புத்திசாலித்தனத்தைப பயன்படுத்தவும் சந்தர்ப்பம் கிடைக்கும்" என்று சொல்லி அவர்களுக்கு வேண்டிய பொருள் கொடுத்து அனுப்பிஞள்.

ஐந்து பேரும் சேர்ந்தே சுற்றுப்பிரயாணத்தை நடத்திஞர்கள். சென்ற இடங்களிலெல்லாம் நல்ல் முத்துவைப் பற்றி இழிவாகப் பேசுவதுதான் மற்றவர்களின் வேலே.

நல்லமுத்துக்கு அவர்களிடத்திலே உண்மையான அன்பு இருந்ததால் அவன் அவர்களுடைய இழிவுப் பேச்சைப் பொறுமையோடு சகித்துக் கொண்டிருந்தான். மூன்று மாதங்களுக்குப் பிறகு அவர்கள் வீரசிங்கபுரம் என்ற ஒரு நகரத்திற்குப் போய்ச் சேர்ந்தார்கள். அந்த நகரத்தை ஆண்ட அரசனுக்கு ஒரே ஒரு மகள் இருந்தாள். அவள் பெயர் பொற்கொடி. பெயருக்கு ஏற்றவாறு அவள் அழகாக இருந்தாள். ஆனால் அவளுக்குத் தற்பெருமை அதிகம். தன் படிப்பைப் பற்றியும் திறமையைப் பற்றியும் அவள் மிக உயர்வாக எண்ணிக்கொண்டிருந்தாள். அவள் ஒரு வேடிக்கையான தீர்மானம் செய்துகொண்டிருந்தாள். யார் வேண்டுமானாலும் அவளிடம் சென்று எப்படிப் பட்ட பொய்யையும் கட்டுக்கதையையும் வாழ்க்கையிலேயே உண்மையாக நடந்தது என்று கூறலாம். யார் கூறுவதைக் கேட்டு அதைப் பொய் என்று அவள் சொல்கிறாளோ அவரை அவள் மணந்துகொள்வதாக அறிவித்திருந்தாள். ஆனால் இதுவரையிலும் அவளிடத்திலே யாரும் வெற்றியடையவில்லை. யார் எதைச் சொன்னாலும், ''நீ கூறுவது உண்மைதான். அது நடந்ததாக நான் நம்புகிறேன்'' என்று அவள் பதில் சொல்லுவாள். வந்தவர் ஏமாந்து திரும்புவார்.

இந்த விஷயம் சாமிநாதன் முதலான ஐவருக்கும் தெரிய வந்தது. அவர்களும் பொற்கொடியிடம் சென்று பேசி வெற்றியடையத் தீர்மானித்தார்கள். ஒவ்வொருவனுடைய புத்திக் கூர்மையைச் சோதிக்கவும் நல்ல சந்தர்ப்பம் கிடைத்தது.

முதல் நாள் எல்லோருக்கும் மூத்தவனை சாமிநாதன் பொற்கொடியிடம் தனது வாழ்க்கை அனுபவம் என்று ஒரு கட்டுக் கதை



யைச் சொல்லப் போனான். அவன் சொல்லும் கதையை யாராலும் மெய்யென்று நம்ப முடியாது. ஏனென்றால் அவன் சொல்லுவதுபோல் வாழ்க்கையிலே நடக்கவே முடியாது. அதனால் பொற்கொடி தனக்கே மனைவியாகப் போகிறாள் என்று அவன் நிச்சயமாக நம்பினான். பொற்கொடியிடம் அவன் உற்சாகத்தோடு கீழ்க்கண்டவாறு தனது வாழ்க்கையில் நடந்ததாகச் சொல்லலானான்.

"எனக்குப் பதினைந்து வயதாக இருந்தபொழுது ஒரு நாள் நான் ஒரு கப்பலில் ஏறி மீன் பிடிப்பதற்காகக் கடலில் நெடுந்தூரம் சென்றேன். என்னுடன் வந்த வேலைக்காரர்கள் கடலில் பெரிய பெரிய வலைகளை வீசினார்கள். ஆனால் அன்று ஒரு மீன்கூட அகப்படவில்லை. எல்லோருக்கும் இது ஆச்சரியத்தை உண்டாக்கிற்று. கடலிலிருந்து மீன் கிடைக்காத நாளே கிடையாது. அப்படியிருக்க அன்றுமட்டும் ஒரு சிறு மீன்கூட அகப்படாதது எல்லோரையும் திகைக்க வைத்தது. அப்படி மீன் கிடைக்காத காரணத்தை ஆராய வேண்டுமென்று நான் கடலுக்குள் குதித்தேன். குதித்து வேகமாக உள்ளே மூழ்கினேன். ஐந்து மைல் ஆழம் உள்ளே போகும் வரையிலும் கண்ணுக்கு ஒரு பிராணிகூடத் தென்படவில்லை. அதுவும் ஆச்சரியமாகத்தான் இருந்தது. நான் மேலும் மேலும் மூழ்கிக் கடலின் அடிப்பாகத்திற்கே சென்றுவிட்டேன். அங்கே மலையைப்போல ஒரு பெரிய திமிங்கிலம் இருந்தது. அது தன் வாயைத் திறந்து அந்தப் பக்கத்திலுள்ள எல்லா மீன்களையும் விழுங்கிக் கொண்டிருந்தது. அன்று வலை வீச்சில் மீன் கிடைக்காமற் போனதற்குக் காரணம் தெரிந்துவிட்டது. நான் கொஞ்சம்கூடத் தயங்காமல் அந்தத் திமிங்கிலத்தின் திறந்த வாய்க்குள் நுழைந்து அதன் வயிற்றுக்குள் சென்றேன். அந்தச் சமயத்தில் எனக்கு அடக்க முடியாத பசி உண்டாகிவிட்டது. அதனால் திமிங்கிலத்தின் வயிற்றுக்குள்ளேயே ஒரு அடுப்புக் கூட்டி நெருப்பு மூட்டினேன். வயிற்றுக்குள் கிடந்த ஏராளமான மீன்களில் நல்ல மீன்களாகப் பொறுக்கி அவற்றை அந்த அடுப்பிலே போட்டுப் பக்குவம் செய்தேன். பசி தீரும் வரையில் சாப்பிட்டேன். பிறகு வெளியே வந்து அந்தத்

திமிங்கிலத்தின் முதுகில் ஓங்கி ஒரு குத்துவிட்டேன். அது துடித்துச் செத்து விழுந்தது. கொஞ்ச நேரததில் திமிங்கிலம் மிதந்து கடலின்மேல் மட்டத்திற்கு வந்துவிட்டது. நான் அதன் முதுகில் ஏறிக்கொண்டு வந்து கப்பலுக்குச் சென்றேன். அந்த திமிங்கிலத்தையும் கப்பலில் சுற்றிக் கொண்டு எல்லோரும் கரைக்கு வந்து சேர்ந்தோம்...'' என்று இவ்வாறு சாமிநாதன் சொல்லி முடித்து ஆவலோடு பொற் கொடியைப் பார்த்தான்.

''நீங்கள் சொன்னது முற்றிலும் உண்மை; அது அப் படியே நடந்த தென்று நான நம்புகிறேன்'' என்று அவள் தயங்காமல் சொல்லிவிட்டாள். சாமிநாதன் ஏமாந்து திரும்பிஞன்.

இரண்டாவது நாள் சாமிநாதனுக்கு அடுத்த தம்பியாகிய மாணிக்கம் பொற்கொடியிடம் சென்று பேசலாஞன்.

''எனக்குப் பத்து வயதிருக்கும்போது ஒரு நாள் இரவு முழுநிலா அழகாக வான வெளியிலே பிரகாசித்துக் கொண் டிருந்தது. எனக்குச் சந்திரமண்டலத்திற்கு அப்பொழுதே போக வேண்டுமென்ற ஆசை உண்டாயிற்று. உடனே என்னுடைய தொழிற்சாலைக்குப் போனேன். ஒரு நொடியிலே ஒரு புஷ்பக விமானம் செய்தேன். அதில் ஏறிக்கொண்டு ஆகாயத்திலே ஜிவ்வென்று பறந்தேன். அடுத்த நொடியிலே சந்திரனுக்குப் போய்விட்டேன். சந்திரன் இங்கிருந்து பார்ப்ப தற்கு அழகாக இருக்கிறதே ஒழிய அங்கே சென்று பார்ப்பதற்கு அழகாக இல்லை. அங்கு இருந்த பெண்களும் குரங்குமூஞ்சிப் பெண்களாக இருந்தார்கள். அதனல் அங்கே தங்கியிருக்கப் பிடிக்கவில்லை. உடனே திரும்பலாம் என்று நினைத்தேன். ஆனல் அதற்குள்ளே ஒரு குரங்குப் பெண் என் புஷ்பக விமானத்திலே குரங்கு வேலை செய்துவிட்டாள். நுட்பமான அந்த விமானம் கெட்டுப்போய்விட்டது. அதைப் பழுது பார்ப்பதற்குத் தொழிற்சாலை இல்லை. அதனல் நான் நிலாவின் வெண்மையான கிரணம் ஒன்றைக் கையில் பற்றிக்கொண்டு அதோடு பூமியை நோக்கிக் குதித்தேன். பூமியைச் சுற்றிலும் வான வெளியிலே கருமேகங்கள் நெருக்கமாகப் படர்ந்திருந்தன.

ஆகையால் நான் கையில் பற்றிக்கொண்டு வந்த நிலாக்கதிர் மேகத்திலேயே அறுந்து நின்றுவிட்டது. நான் அந்தக் கதிரை விட்டுவிட்டு ஒரு மேகத்தின்மேல் படுத்துக்கொண்டு ஆகாயத்தில் பறந்தேன். கொஞ்ச நேரத்தில் அந்த மேகம் மழையாகப் பெய்ய ஆரம்பித்தது. நான் ஒரு மழைத்துளிக்குள் புகுந்துகொண்டு பூமிக்கு வந்து சேர்ந்தேன்''.

இவ்வாறு அவன் சொல்லி முடித்து வாய் மூடுவதற்கு முன்னாலே பொற்கொடி, ''நீங்கள் சொன்னது எல்லாம் உண்மை. நான் அதை முற்றிலும் நம்புகிறேன்'' என்று கூறினாள். மாணிக்கமும் தோல்வியடைந்து திரும்பினான்.

மறுநாள் காலையில் சுந்தரம் தனது திறமையைக் காட்டப் பொற்கொடியிடம் புறப்பட்டான். பொற்கொடி அவன் சொல்வதைக் கூர்ந்து கேட்கலானாள்.

''எனக்கு ஐந்து வயதாக இருக்கும்பொழுது ஒரு நாள் நான் காட்டிலே ஒரு சிங்கத்தின் மீதேறிக்கொண்டு உல்லாசமாகச் சுற்றிக் கொண்டிருந்தேன். கொஞ்ச நேரத்தில் எனக்குப் பசிக்க ஆரம்பித்தது. அதனால் அங்கே தென்பட்ட ஒரு மாமரத்தின் அருகே சென்றேன். அது ஒரு விசித்திரமான மாமரம். அடிமரமானது நுனிமரம்போலச் சிறியதாகவும், நுனிமரம் அடிமரம் போலப் பருத்தும் இருந்தன. அந்த மரத்தில் ஏராளமாகப் பலாப் பழங்களும் ஆப்பிள் பழங்களும் பழுத்துத் தொங்கின. நான் மரத்தின் மீதேறி விருப்பமான பழங்களைச் சாப்பிட்டுக்கொண்டே யிருந்தேன். சாப்பிடச் சாப்பிட என் உடம்பு வளர்ந்து கொண்டே இருந்தது. கைகளும் கால்களும் பனைமரங்களைப்போல நீண்டு வளர்ந்து விட்டன. வயிறு ஒரு சிறிய குன்றுபோல ஆகிவிட்டது. அந்த நிலையிலே நுனிமரத்தைவிட்டு அடிமரத்திற்கு இறங்கினால் மெல்லியதான அடிமரம் முறிந்து விழுந்துவிடு மென்று எனக்குத் தோன்றியது. அதனால் உச்சியிலிருந்தபடியே காலை நீட்டி ஒரு அடி எடுத்து வைத்து என் வீட்டிற்குச் சென்று அங்கிருந்த ஒரு ஏணியை எடுத்து வந்தேன். அந்த ஏணியை மரத்தின்மீது சாய்த்து வைத்துக் கீழேயிறங்கி வீட்டிற்கு வந்து சேர்ந்தேன்''.

இவ்வாறு சுந்தரம் சொல்லி முடிக்கு முன்பே பொற்கொடி "நீங்கள் சொன்னது அவ்வளவும் உண்மைதான். நான் அது அப்படியே நடந்ததாக முற்றிலும் நம்புகிறேன்" என்று சொல்லிவிட்டாள். சுந்தரமும் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு திரும்பினான்.

மறுநாள் பொழுது விடிந்ததும் வேலுச்சாமி பொற்கொடியிடம் புறப்பட்டான். அவன் சொல்லுவதையும் அவள் உற்றுக் கேட்டுக்கொண் டிருந்தாள்.

"நான் பிறப்பதற்கு முன்பே ஒரு வீரச்செயல் புரிந்திருக்கிறேன். அப்பொழுது என் தாய் வயிற்றில் கருப்பைப்பையில் நான் வளர்ந்து வந்தேன். ஒரு நாள் என் தாயார் காட்டு வழியில் தனியாகச் சென்று கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் துணையாக யாருமில்லை. மாலை நேரமாயிற்று. திடீரென்று ஒரு வேங்கைப்புலி பாய்ந்து வந்தது. என்ன செய்வதென்று தோன்றாமல் என் தாயார், நடுங்கிக்கொண்டு அலறினாள். 'அம்மா பயப்படாதே' என்று தைரியம் சொல்லிக்கொண்டே நான் கருப்பைப் பையைவிட்டு வெளியே குதித்தேன். அதற்குள்ளே வேங்கைப் புலி மிக அருகிலே வந்துவிட்டது. அதன் மூக்கிலே நான் எனது இரண்டு கைவிரல்களை விட்டு அந்தப் புலியைத் தூக்கித் தரையிலே ஓங்கி அடித்தேன். புலி வீறிட்டுக் கீழே விழுந்து எலும்பெல்லாம் நொறுங்கி மாண்டு போயிற்று. நான் மகிழ்ச்சியோடு மீண்டும் கருப்பைப்பைக்குள் புகுந்து கொண்டேன்."

வேலுச்சாமி இவ்வாறு சொல்லி நிறுத்துவதற்குள் பொற்கொடி "நீங்கள் சொன்னது அவ்வளவும் உண்மை. அப்படியே நடந்ததாக நான் நம்புகிறேன்" என்று கூறினாள். நான்காவது தம்பியான அவனும் தோல்வியுற்றுத் திரும்பிவிட்டான்.

அடுத்த நாள் பொழுது விடிந்ததும் கடைசித் தம்பியாகிய நல்லமுத்து புறப்பட்டான். பொற்கொடி அவன் கூறுவதையும் கவனமாகக் கேட்கத் தொடங்கினாள்.

"மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் நான் மந்திரத்தீவு என்னும் ஒரு தீவிலே வசித்துவந்தேன். வாணிகம் செய்து

ஏராளமான பொருள் சம்பாதித்து அந்தத் தீவின் அரசிளங் குமரனைப் போல வாழ்ந்து வந்தேன். அந்தச் சமயத்தில் ஒரு நாள் ஒரு முனிவர் என்னிடம் வந்தார். அவருக்கு நான் அன் போடு பணிவிடை செய்து நிறையப் பொன்னும் மணியும் கொடுத்தேன். அவர் மகிழ்ச்சியடைந்து எனக்கு ஒரு அற்புத மான தாமரை மொக்கைக் கொடுத்துவிட்டுச் சென்றார். அத் தாமரை மொக்கை நான் கையில் வைத்துக்கொண்டு அதன் அழகைப் பார்த்து வியந்து கொண்டிருந்தேன். தாமரை மொக்கு மெதுவாக விரியத் தொடங்கியது. அதற்குள்ளிருந்து மிக அழகான ஒரு இளங்கன்னி வெளியே வந்தாள். அவள் என்னைக் காதலித்தாள். நானும் அவளைக் காதலித்தேன். இரு வரும் திருமணம் செய்து கொண்டு ஓராண்டு இன்பமாக வாழ்ந்து வந்தோம். பிறகு அவள் திடீரென்று ஒரு நாள் எப்படியோ மறைந்து போய்விட்டாள். என்னால் அவளைப் பிரிந்து வாழ முடியவில்லை. அதனால் எனது பொருள்களை யெல்லாம் தானம் செய்துவிட்டு நான் அங்கிருந்து புறப்பட் டேன். இரண்டு ஆண்டுகளாக எங்கெங்கோ சுற்றி அவளைத் தேடி அலைந்துவிட்டுக் கடைசியில் இங்கு வந்து சேர்ந்தேன். வந்து சில நாட்களாயின. இன்றுதான் இந்த நகரத்து அரசிளங்குமரியாகிய உன்னைப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. இங்கு வந்து பார்த்தால் என் மனைவியே இந்த நகரத்து அரசிளங்குமரியாக இருக்கிறாள். இது எனக்கு அள வில்லாத மகிழ்ச்சியை உண்டுபண்ணுகிறது''.

இவ்வாறு நல்லமுத்து சுருக்கமாகக் கூறி முடித்தான். பொற்கொடி ஒன்றும் பேசாமல் மௌனமாக அமர்ந்திருந் தாள். அவளுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. அவன் சொன்னதை உண்மை யென்று சொன்னாலும் அவள் அவனுக்கு மனைவியாக வேண்டும். பொய்யென்று சொன்னா லும் நிபந்தனையின்படி அவனுக்கு மனைவியாக வேண்டும். அதனால் பொற்கொடி பேசாமல் இருந்தாள். நல்லமுத்து வெற்றியடைந்தான்.

சில நாட்களில் அவனுக்கும், பொற்கொடிக்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. நல்லமுத்துவே அறிவில் மிக்கவன் என்று அவனுடைய அண்ணன்மார்கள் ஒப்புக்கொண்டார்கள். ஒப்புக்கொண்டதோடு தங்கள் பொறுமைக் குணத்தையும் விட்டு விட்டார்கள். தாயார் மிகுந்த மகிழ்ச்சியடைந்தாள்.



# முள் எலியும் முயலும்

ஒரு முள்ளெலி தினந்தோறும் அதிகாலையில் இரைதேடு வதை வழக்கமாக வைத்துக்கொண்டிருந்தது. அது செல்லுகின்ற வழியிலே இருந்த புல்லை மேய்வதற்காக ஒரு முயல் அந்த நேரத்தில் அங்கு வருவதுண்டு. வளைந்து குட்டையாக இருக்கும் முள்ளெலியின் கால்களைப் பார்த்ததும் முயலுக்குச் சிரிப்பு வரும். முள்ளெலி குடுகுடுவென்று மெது வாக ஓடுவதைக் கண்டும் அதற்குச் சிரிப்பு வரும். அதன் உடம்பெல்லாம் முள்ளாக இருப்பதை நோக்கியும் முயல் நகைக்கும்.

''முள்ளெலியாரே, எங்கே இவ்வளவு வேகமாகப் புறப்பட் டீர்கள்?'' என்று இப்படி முயல் கிண்டலாகத் தினமும் கேட்ப துண்டு. முயல் தன்னைக் கேலி செய்வதை முள்ளெலி தெரிந்து கொள்ளாமல் இருக்கவில்லை. ஆனால் அது பொறுமையோடு ஏதாவது பதில் சொல்லும். அப்படிச் சொல் லும் பதிலைக் கேட்டு மேலும் கேலியாக முயல் பேசத் தொடங்கும்.



இப்படிப் பல நாட்கள் நடந்தன. ஒரு நாள், "ஐயா, முள்ளெலியாரே, இப்படி மின்னல் வேகத்திலே போகிறீரே உங்கள் உடம்பு கெட்டுப்போகாதா? காடுமேடுகளெல்லாம் உங்கள் வேகத்திலே அதிர்ந்து நடுங்குகின்றன" என்று சொல்லிவிட்டு முயல் கள்ளச் சிரிப்புச் சிரித்தது. முள்ளெலி அந்தச் சிரிப்பைக் கவனித்துவிட்டது.

அன்று அதற்கு எப்பொழுதும் போலப் பணிவாகப் பதில் சொல்ல மனம் இடங்கொடுக்கவில்லை. அதன் மனத்தில் மிகப் பெரிய வருத்தம் தோன்றிற்று. "ஐயா, முயலாரே உங்களுக்குக் கால் நீண்டிருந்தாலும் ஓட்டப் பந்தயம் வைத்தால் என்னை உங்களால் தோற்கடிக்க முடியாது. நான்தான் நிச்சயமாக வெற்றியடைவேன். இதை நினைவில் வைத்துக்கொள்ளும்" என்று அமைதியாகச் சொல்லிற்று.

இதைக் கேட்டதும் முயலுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. முதலில் அது தன் காதுகளையே நம்பவில்லை. இந்த முள்ளெலிக்குப் பயித்தியம்தான் பிடித்திருக்கிறது என்று பிறகு எண்ணிக்கொண்டது.

"என்னோடு ஓட்டப்பந்தயத்திற்கு வருகிறீரா? உம்மால் அது முடியுமா?" என்று முயல் அசட்டையோடு கேட்டது.

"நான் வர எப்பொழுதும் தயார். ஆனால் உமக்குத் தோல்வி நிச்சயம். இதை எண்ணிப் பார்த்துப் பேசுங்கள்"



என்று மறுபடியும் நிதானமாகவே முள்ளெலி பதில் சொல்லிற்று.

முயலுக்கு மூக்கிற்குமேல் கோபம் வந்துவிட்டது. இந்த முள்ளெலியின் மண்டைக் கர்வத்தை ஒரு நொடியில் அடக்க வேண்டுமென்று தீர்மானித்துக்கொண்டு, "சரி இப்பொழுதே இந்தயிடத்திலிருந்தே இந்தக் காட்டின் கோடி வரை ஓடலாம். முதலில் அங்கே போய்ச் சேர்வது நீயா நானா பார்க்கலாம்" என்றது.

"ஐயா, முயலாரே, நீர் நன்றாகப் புல் மேய்ந்து விட்டீர். நான் இன்னும் உணவே தொடவில்லை. இந்தச் சமயத்தில் ஓட்டப் பந்தயத்திற்குக் கூப்பிடுவது சரியா? நான் வீட்டுக்குப் போய் உணவருந்திவிட்டு இரண்டு நாழிகையில் இந்த இடத்திற்கே வருகிறேன். நீர் இங்கேயே புல் மேய்ந்துகொண்டிரும். நான் வந்தவுடனே பந்தயம் தொடங்கலாம்" என்றது முள்ளெலி. முயல் இதற்கு ஒப்புக்கொண்டது.

முள்ளெலி வீட்டிற்குப் புறப்பட்டது. அங்கு சென்றதும் தன் மனைவியைக் கூப்பிட்டு விஷயத்தைச் சொல்லிற்று. "நீ எனக்கு ஒரு உதவி செய்யவேண்டும். இப்பொழுது என்னுடன் கூடவா" என்றது முள்ளெலி. அதன் மனைவியும் உடனே சம்மதித்துப் புறப்பட்டது. இரண்டும் சேர்ந்து கொண்டு, ஓட்டப் பந்தயம் எந்த இடத்தில் போய் முடிவதென்று தீர்மானிக்கப் பட்டுள்ளதோ அந்த இடத்திற்கு அவசர அவசரமாகச் சென்றன. அங்கே போய்ச் சேர்ந்ததும் ஆண் எலி தன் மனைவியைப் பார்த்து, "நீ இந்த இடத்திலேயே தங்கி இரு. முயல் வேகமாக இந்த இடத்தை நோக்கி வரும் போது, நீ அதைப் பார்த்து 'என்ன முயலாரே இவ்வளவு நேரமாயிற்று உமக்கு? நான் வந்து வெகுநேரமாகிறதே?' என்று சொல்" என்று கூறிற்று. இப்படித் தந்திரம் சொல்லிக் கொடுத்துவிட்டு முயலைத் தேடிக்கொண்டு அது சென்றது. பெண் எலி குதூகலத்தோடு அங்கேயே தங்கிற்று.

குறிப்பிட்ட நேரத்திற்கெல்லாம் ஆண் முள்ளெலி முய லிடம் வந்து சேர்ந்தது. உடனே இரண்டும் ஓட்டப் பந்தயத் திற்குத் தயாராயின. முயல் ஒரே பாய்ச்சலாகத் தாவிக் குதித்து வெகுவேகமாக ஓடி மறைந்துவிட்டது. முள்ளெலி ஓடுவதைப் போலக் கொஞ்ச தூரம் பாசாங்கு செய்துவிட்டு, முயல் கண் ணுக்கு மறைந்ததும், புறப்பட்ட இடத்திற்கே திரும்பிவந்து நிம்மதியாகப் படுத்துக்கொண்டது.

முயல் நாலுகால் பாய்ச்சலிலே தாவித்தாவிச் சென்று குறிப்பிட்ட இடத்தை அடைந்தது. "அந்த முள்ளெலி இன் னும் நூறில் ஒரு பங்கு தூரம்கூட வந்திருக்க முடியாது" என்று பெருமையோடு எண்ணிக் கொண்டு அது முன்னால் பார்த்தது.

"என்ன முயலாரே, இவ்வளவு நேரமா உமக்கு? பாவம் உம்மால் என்னுடன் ஓடிவர முடியுமா?" என்று கூறும் முள் ளெலியின் குரல் கேட்டது. அதைக் கேட்டதும் முயல் அப் படியே திகைத்துப்போய் நின்றுவிட்டது. அதற்கு ஒன்றுமே புரியவில்லை. "முள்ளெலியாரே, ஒரு தடவை ஜெயித்தால் அது உண்மையான வெற்றியாகாது. இங்கிருந்து மறுபடியும் நாம் புறப்பட்ட இடத்திற்கே ஓடலாம். இந்தத் தடவை யாருக்கு வெற்றி கிடைக்குமென்று பார்ப்போம்" என்று தலை குனிந்து கொண்டே சொல்லிற்று.

"ஓ, நான் தயார். புறப்படுங்கள்" என்றது முள்ளெலி.

முயல் மீண்டும் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்தோடிற்று. பெண் முள்ளெலி அங்கேயே நின்று கொண்டது. முதலில் புறப்பட்ட இடத்தை முயல் அணுகியதும் அங்கிருந்த ஆண் முள்ளெலி, "என்ன முயலாரே, பாவம் உங்களால் ஓட முடிய வில்லை" என்று பரிகாசமாகச் சொல்லிற்று.

முயல் மறுபடியும் மேலும் ஒரு முறை ஓடலாம் என்றது. முள்ளெலியும் உடனே சம்மதித்தது. இப்படிப் பல முறை முயல் ஓடிஓடிப் பார்த்து மூச்சுத் திணறிக் களைத்துப் போய் விட்டது. வெற்றி மட்டும் அதற்குக் கிடைக்கவில்லை. கடைசி

யில் நகரக்கூட முடியாமல் அது அப்படியே ஓர் இடத்தில் படுத்துக்கொண்டு தன் தோல்வியை ஒப்புக் கொண்டது.

முயலுக்குக் கால்கள் நீண்டிருந்தாலும் மூளை கொஞ்சம் கட்டைதான். முள்ளெலிகளோ ஆண்பெண் எல்லாம் ஒன்றைப் போலவேயிருந்தன. அதனால் முயலின் மூளைக்கு முள்ளெலியின் சூழ்ச்சி எட்டவேயில்லை.



# பொய் சொல்லி ராஜா

முன்னொரு காலத்தில் நாகபுரி என்று ஒரு பட்டணம் இருந்தது. அந்தப் பட்டணத்தை ஆண்ட அரசனுக்கு நீண்டகாலமாகப் பிள்ளையில்லாமலிருந்து கடைசியில் ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தையின் தாயாராகிய அரசி அதைச் செல்வமாக வளர்த்து வந்தாள். அதே சமயத்தில் பொய்யே பேசக்கூடாது என்று குழந்தைக்குப் போதித்து வந்தாள். "உயிர் போவதாக இருந்தாலும் பொய் பேசக்கூடாது" என்று அவள் சொல்லுவாள். பல கதைகள் சொல்லியும் அந்த எண்ணத்தை நன்றாக மனதில் பதியச் செய்வாள். தாயின் அன்பை நன்றாக அறிந்திருந்த அந்தக் குழந்தை அவள் சொன்னபடியே நடக்கப் பழகிக் கொண்டிருந்தது. அதற்கு லோகநாதன் என்று பெயர்.

லோகநாதனுக்கு எட்டு வயதாக இருக்கும்போது திடீரென்று ஒரு நாள் இரவில் ஒரு பக்காத்திருடன் அரண்மனைக்குள்ளே எப்படியோ தந்திரமாகப் புகுந்து யாருமறியாமல் அவனைத் தூக்கிக்கொண்டு போய் விட்டான்.

நாகபுரிக்கு மேற்குப் பக்கத்திலே ஒரு பெரிய மலை இருந்தது. அதில் அநேக குகைகள் உண்டு. அந்தக் குகைகளைச் சுற்றிலும் எங்கு பார்த்தாலும் பெரிய பெரிய மரங்களும் புதர்களும் இருக்கும். அவற்றின் வழியாக யாருமே வரப் பயப்படுவார்கள்.

அப்படிப்பட்ட இடத்தில்தான் அந்தப் பக்காத்திருடன் யாருக்கும் தெரியாமல் வசித்து வந்தான். அவன் திடீரென்று ஏதாவது ஒரு ஊருக்குள் நுழைந்து கொள்ளையடித்துக் கொண்டு போய்விடுவான். அவன் எங்கிருந்து வருகிறான், எப்பொழுது வருகிறான் என்று யாருக்குமே தெரியாது.

நாகபுரி அரசன் அவனைப் பிடிக்க எத்தனையோ முயற்சி செய்தும் பலிக்கவில்லை. தனது குழந்தையைத் தூக்கிக் கொண்டு போனபிறகு அரசனே பல இடங்களுக்குத் தனது படை வீரர்களோடு சென்று தங்கி அந்தப் பக்காத்திருடனைக் கண்டுபிடிக்கப் பிரயத்தனம் செய்தான். அப்பொழுதும் அவன் அகப்படவில்லை. நாகபுரிக்குப் பக்கத்தில் சந்திரபுரி என்ற ஒரு பட்டணம் உண்டு. அந்தப் பட்டணத்து அரசனும் திருடனைப் பிடிக்க முயன்றான். ஆனால் அவனாலும் முடியவில்லை.



பக்காத்திருடனுக்கு எட்டு வயதுள்ள ஒரே ஒரு மகன் இருந்தான். அவன் பெயர் செல்லமுத்து. பிறந்த சில மாதங்களில் அவன் தாய் இறந்துபோனதால் பக்காத் திருடனே அவனை வளர்த்து வந்தான். "என்றைக்கும் யாரிடத்திலும் பொய் தான் பேசவேண்டும்: உண்மை



சொல்லக் கூடாது'' என்று அந்தத் திருடன் தன் மகனுக்குப் போதித்து வந்தான்.

தன் மகன் பொய்யே பேசுகிருனு என்று அறிந்து கொள் வதற்காகப் பக்காத்திருடன் பலவிதமான சோதனைகள் எல்லாம் செய்வான். சோதனையில் ஒரு தடவை தப்பினுலும் மகனை நன்ருக உதைப்பான்.

ஒரு நாள் காலையில் செல்லமுத்துவும் பக்காத்திருடனும் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். இருவரும் சாப்பிட்டு முடிந்த வுடன் பக்காத்திருடன் தன் மகனைப் பார்த்து, "காலை உணவு சாப்பிட்டாயிற்ரு?'' என்று கேட்டான். "ஆயிற்று'' என்று செல்லமுத்து பதில் சொன்னுன்.

உடனே பக்காத்திருடன் அவன் கன்னத்திலே ஓங்கி ஓர் அறை கொடுத்தான். "ஏண்டா, சாப்பிட்டாயிற்று என்று எதற்காக உண்மையைச் சொன்னுய்?'' என்று அவன் கோபத் தோடு கேட்டான்.

''இரண்டு பேருமாகத்தானே இப்பொழுது சாப்பிட் டோம்?'' என்ருன் செல்லமுத்து.

"அப்படியிருந்தாலும் நீ உண்மையைச் சொல்லியிருக்கக் கூடாது. அதோடு இன்னெரு விஷயத்தையும் நீ தெரிந்து கொள்ளவேண்டும். நீ யாரையும் நம்பக்கூடாது. நம்பினுல் ஏமாந்து போய் அகப்பட்டுக் கொள்வாய்'' என்று அவன் போதனை செய்தான். இப்படிப் போதனை செய்தே திருடன் தன் மகனை வளர்த்துவந்தான்.

இந்தச் செல்லமுத்துவுடன் அரச குமாரனுன லோகநாதன் மலைக் குகையிலே வாழ வேண்டி நேர்ந்தது.

பக்காத்திருடனைக் கண்டு பிடிப்பதற்காக நாகபுரி அரசன் முயற்சி செய்தானல்லவா? அரசனுல் தன்னைக் கண்டுபிடிக்க முடியாது என்று காண்பிப்பதற்காகவே பக்காத்திருடன் அந்த

அரசனுடைய பையனையே தூக்கிக் கொண்டு வந்து விட்டான்.

லோகநாதன் குகையிலே கைதியைப் போல வாழ வேண்டியதாயிற்று. அவனைச் செல்லமுத்தாவது பக்காத் திருடனாவது சதா காவல் புரிந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் இரண்டுபேரும் வெளியில் போனாலோ அல்லது தூங்கினாலோ லோகநாதனை ஒரு குகைக்குள் அடைத்து வைத்து விடுவார்கள்.

இவ்வாறு பல வருஷங்கள் சென்றன. லோகநாதனுக்கும், செல்லமுத்துவுக்கும் இருபது வயதாயிற்று. அப்பொழுது அவர்கள் இருவரும் சேர்ந்து திருட்டுக்குப் போகவேண்டும் என்று பக்காத்திருடன் சொன்னான். லோகநாதன் தன் உயிர் போவதாக இருந்தாலும் திருட்டுக்குப் போகமுடியாது என்று கண்டிப்பாகப் பேசினான். அவனை அடித்தார்கள். அப்பொழுதும் அவன் இணங்கவில்லை. அதனால் செல்லமுத்து மட்டும் கொள்ளையடிக்கப் போனான்.

அவன் குகைக்குத் திரும்பி வரும்போது நாகபுரிக் காவலாளிகள் பார்த்துக் கொண்டார்கள். அவன் போன வழியை நன்கு தெரிந்துகொண்டு அவர்கள் பட்டணத்துக்குப் போய் அரண்மனையில் விஷயத்தைச் சொன்னார்கள்.

அந்தச் சமயத்திலே நாகபுரியில் அரசன் யாரும் இல்லை. அரசனும் அரசியும் வயதாகி இறந்துவிட்டார்கள். லோகநாதனைக் கண்டுபிடிக்க முடியாத கவலையோடு அவர்கள் இறந்ததால் மந்திரிகள் லோகநாதனை எப்படியாவது தேடிப் பார்க்க வேண்டுமென்று முயற்சி செய்தார்கள்.

அவர்கள் பக்காத்திருடனுடைய இருப்பிடத்தைப் பற்றிச் சேதி அறிந்ததும் அந்த இடத்தை நோக்கிப் பல வீரர்களுடனே வந்தார்கள்.

அவர்கள் வரும் சமயத்தில் லோகநாதனும் செல்லமுத்துவும் மலைக் குகைக்குச் சற்று தூரத்திலே காட்டுக்குள் மல்யுத்தம் பயிற்சி செய்து கொண்டிருந்தார்கள். லோகநாதனுக்கு ஈடாக செல்லமுத்து மல்யுத்தம் செய்ய முடியாது. அதனால்

லோகநாதன் அவனைச் சுலபமாகக் கீழே விழ்த்தி நிலத்தோடு அழுத்தினான். அவன்மேலே ஏறி உட்கார்ந்தான்.

அந்த வேளையிலே மந்திரிகளும் படைவீரர்களும் அங்கு வந்து சேர்ந்தனர். முதன் மந்திரி லோகநாதனைப் பார்த்துத் தான் வந்த விஷயத்தைச் சொல்லியதோடு அவனை யாரென்று அறிந்துகொள்ள விரும்பினான்.

“நான்தான் ராஜகுமாரன். என் பெயர் லோகநாதன்” என்று அவன் சொன்னான்.

அவன் சொல்லி வாய் மூடுவதற்கு முன்பு செல்லமுத்து முதன் மந்திரியைப் பார்த்து, “இவன் பொய் சொல்லுகிறான். இவன் ராஜகுமாரனல்ல. நான் தான் ராஜகுமாரன்” என்று பொய் சொன்னான்.

முதன் மந்திரிக்கு யார் சொன்னது உண்மை என்று தெரியவில்லை. அதனால் கொஞ்சம் யோசனை செய்து கொண்டிருந்தான்.

அதைக்கண்டு செல்லமுத்து, “உங்களுக்கு இன்னும் சந்தேகமா? நீங்கள் வரும்போது இவன் என்மேலே ஏறிக்கொண்டு என்னை நிலத்தில் அழுத்தியதை நீங்கள் பார்க்கவில்லையா? சிறைக்கைதியாகக் கிடக்கும் ராஜகுமாரனாகிய நான் அந்தப் பக்காத்திருடனின் மகன்மேல் ஏறி உட்கார அவன் சம்மதிப்பானா? நீங்களே யோசித்துப் பாருங்கள். அதற்கு மேலும் உங்களுக்குச் சந்தேக மிருக்குமானால் வாருங்கள். நான் உங்களுக்கு அந்தப் பக்காத்திருடனைக் காட்டிக் கொடுக்கிறேன். அவன்தான் என்னை இதுவரை இங்கு கைதியாக வைத்திருக்கிறவன்” என்று சந்தேகத்துக் கிடமில்லாமல் மளமள வென்று பேசினான்.

மந்திரிகளும் படைவீரர்களும் செல்லமுத்துவைப் பின் தொடர்ந்து சென்றார்கள்.

செல்லமுத்து பக்காத்திருடனாகிய தன் தந்தையைக் காட்டினான். “இவன் தான் பக்காத்திருடன். இவனைப் பிடித்து விலங்கு போடுங்கள்” என்று அதிகாரத்தோடு சொன்னான். உடனே வீரர்கள் திருடனைக் கைது செய்தார்கள்.

செல்லமுத்துதான் லோகநாதனென்று அனைவரும் நம்பி விட்டார்கள். அதனால் அவனை நாகபுரிக்கு அரசனாகச் செய்தார்கள். பக்காத்திருடனையும் உண்மையான லோகநாதனையும் பாதாளச் சிறையில் அடைத்தார்கள்.

அரசனாகிவிட்டால் மிகுந்த சந்தோஷம் உண்டாகுமென்று செல்லமுத்து நினைத்தான். ஆனால் அரசனானதிலிருந்து அவனுக்குக் கவலை யாரம்பித்துவிட்டது. தன் தகப்பன் யாரையும் நம்பவேண்டாம் என்று சொல்லிக் கொடுத்திருக்கிறானல்லவா? அதனால் அவனால் யாரையும் நம்பமுடியவில்லை. மேலும் ஒவ்வொருவனும் தன்னைப் போல் பொய்யே பேசுவதாக அவனுக்குப் பட்டது.

மந்திரிகளும் பிரதானிகளும் அரசனிடத்திலே மிகுந்த விசுவாசம் உடையவர்களென்று எல்லோரும் சொன்னார்கள். ஆனால் செல்லமுத்துவால் அதை நம்ப முடியவில்லை. பொக்கிஷசாலையில் இருக்கும் பணத்தையெல்லாம் முதல் மந்திரியோ மற்ற மந்திரிகளோ அபகரித்துக் கொள்ளுவார்களென்று அவனுக்கு பயம் உண்டாயிற்று. அதனால் பொக்கிஷசாலையின் சாவிகளை யெல்லாம் அவனே வைத்துக்கொண்டு இரவிலே அதற்கு வெளியிலிருந்து தூங்காமல் காவல் காத்து வந்தான். அதனால் தூக்கமில்லாமல் கஷ்டப்பட்டான்.

பகலிலே எந்தக் காரியத்தைப் பற்றி யார் சொன்னாலும் அவனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. "பொய்யா பேசுகிறாய்?" என்று எல்லோரிடமும் சீறி விழுந்தான். அவன் இவ்வாறு நடந்துகொள்வதைக் கண்டு எல்லோரும் திகைப்படைந்தார்கள்.

செல்லமுத்துவுக்குப் பகலிலும் சந்தோஷ மேற்படவில்லை. இரவிலே தூங்குவதற்கே முடியாமல் காவல் வேலை செய்ய வேண்டியதாயிற்று.

இப்படியிருக்கும்போது சந்திரபுரி அரசன் தன் மகளைச் செல்லமுத்துவுக்குக் கலியாணம் செய்து கொடுப்பதற்காக அதைப் பற்றிப் பேசுவதற்கு தன் மந்திரியையும் வேறு முக்கியமான சிலரையும் நாகபுரிக்கு அனுப்பினான்.

அவர்கள் தாங்கள் வந்த நோக்கத்தைப் பற்றி எடுத்துச் சொன்னார்கள். செல்லமுத்துவுக்கு உடனே சந்திரபுரி அரசன்

மேல் சந்தேகம் வந்துவிட்டது. "இவர்களெல்லாம் கலியாணப் பேச்சுப் பேசுவது போல வந்து இந்த நாட்டு ரகசியங்களைத் தெரிந்து கொண்டுபோக வந்திருக்கிறார்கள். நமது பட்டணத் தின்மேல் படையெடுக்கத்தான் இந்த ஏற்பாடு செய்திருக் கிறார்கள்" என்று நினைத்தான்.

உடனே தனது சேனைகளைத் திரட்டிக்கொண்டு சந்திரபுரி அரசன்மேல் சண்டைக்குப் புறப்பட்டான். சேனாதிபதி எவ் வளவு சொல்லியும் அவன் பேச்சைக் கேட்கவில்லை. "சேனாதி பதியும் பகைவர்களோடு சேர்ந்திருக்கிறான். அதனால்தான் போர் வேண்டாமென்கிறான்" என்று சந்தேகித்து அவனைச் சிறையில் போடும்படி உத்தரவிட்டுத் தானே படைத்தலை வனாகப் போருக்கு புறப்பட்டான்.

நாகபுரி வீரர்கள் மனமில்லாமல் போர் செய்தார்கள். அத்துடன் செல்லமுத்துவுக்குப் போரை நடத்தத் தெரிய வில்லை. அதனால் அவன் தோல்வியடைந்து போர்க்களத்தை விட்டு ஓட்டமெடுத்தான். அந்தச் சமயத்தில் ஓர் அம்பு முதுகில் படவே அப்படியே விழுந்து உயிர்விட்டான்.

உயிர் விடும் தருணத்தில்தான் அவனுக்குத் தான் செய்த தவறெல்லாம் நினைவுக்கு வந்தது. பொய் பேசி ஒரு சுகமும் அடையவில்லையே என்றும் விசனப்பட்டான். அதனால் அவன் உயிர் விடுவதற்கு முன்பு பக்கத்திலிருந்த வீரர்களைக் கூப்பிட்டு பாதாளச் சிறையில் இருப்பவனே உண்மையான ராஜகுமார னென்று சொல்லிவிட்டான்.

லோகநாதனைச் சிறையிலிருந்து அழைத்து வந்து நாக புரியின் அரசனாக்கினார்கள். சந்திரபுரி அரசனும் உண்மையை அறிந்து மகிழ்ச்சியடைந்து தன் மகளை அவனுக்கு மணம் செய்து கொடுத்தான். லோகநாதன் தன் குடிகளை அன்போடு நெடுங்காலம் ஆண்டுவந்தான்.



# மந்திரத் தூரிகை

சீன தேசத்திலே ஒரு சிறிய ஊரிலே ஒரு பையன் தனியாக ஒரு குடிசையிலே வசித்து வந்தான். அவனுக்குத் தாயுமில்லை தந்தையுமில்லை. அவன் ஓர் அனாதை. அதனால் அவன் தானே வேலை செய்து சம்பாதித்து வயிறு வளர்த்து வந்தான். வனத்திற்குள்ளே புகுந்து விறகு பொறுக்கி விற்பான். சில நாட்கள் விளை நிலங்களிலே களை எடுக்கச் செல்வான். இப்படி அவன் வாழ்க்கை நடத்தினான்.



அந்தப் பையனுடைய பெயர் மாலியாங். அவனுக்கு அழகான சித்திரங்களும், ஓவியங்களும் எழுதவேண்டுமென்று அளவுகடந்த ஆசை. ஆனால் அவனிடம் சித்திரம் எழுதும் தூரிகை வாங்கப் பணம் இல்லை. தூரிகை இருந்தால்தான் பலவகையான வர்ணங்களில் அதைத் தோய்த்து நல்ல நல்ல ஓவியங்கள் வரைய முடியும். மாலியாங்கிடத்தில் தூரிகையில்லாவிட்டாலும் அவன்

ஓவியம் வரைவதை நிறுத்தவில்லை. மரக் குச்சிகளைக் கொண்டு மண்ணிலே சித்திரம் வரைவான். பச்சைத் தழைகளைப் பறித்து அவற்றைச் சுருட்டிப் பிடித்துக் கொண்டு சுவர்களிலே குருவி கள் வரைவான். ஆற்றுக்குச் சென்றால் விரலால் தண்ணீரைத் தொட்டுத் தொட்டுப் பாறை மேலே உருவங்களை எழுதுவான். இவ்வாறு எழுதி எழுதி அவன் மிகவும் தேர்ச்சி அடைந்து விட்டான். அவன் வரையும் குருவிகளும் விலங்குகளும் உயி ருள்ளவை போலவே இருக்கும். தூரிகையில்லாமலே அவ



னுக்கு அவ்வளவு திறமை ஏற்பட்டிருந்தது. தூரிகையும் இருந்தால் பெரிய ஓவியனென்று புகழ்பெறலாம் என்று அவனுக்கு ஆசை. ஆனால் அவனால் ஒரு சிறிய தூரிகையும் வாங்க முடியவில்லை. வேலை செய்து சம்பாதிக்கும் பணம் அரை வயிற்றுக் கஞ்சிக்கே போதவில்லை. இருந்தாலும் தூரிகை வேண்டுமென்ற ஆசைமட்டும் அவன் மனத்திலே எப்பொழுதும் இருந்தது.

இப்படியிருக்கும்பொழுது ஒரு நாளிரவு அவனுடைய கனவிலே யாரோ ஒரு முனிவர் தோன்றினார். அவர் கையிலே ஒரு அழகான தூரிகை இருந்தது. அதற்குத் தங்கத்திலே பிடி போடப்பட்டிருந்தது. அதனால் அது பளபளவென்று மின்னிற்று. அந்த முனிவர், "மாலியாங், இதோ இந்த மந்திரத் தூரிகையை எடுத்துக்கொள். இதற்கு அதிசயமான சக்தியெல்லாம் உண்டு" என்று சொல்லி அவனிடம் தூரிகையைக் கொடுத்துவிட்டு மறைந்தார்.

மாலியாங் மிகவும் குதூகலமடைந்தான். அடுத்த நாள் காலையில் அவன் அந்தத் தங்கத் தூரிகையைக் கொண்டு காகிதத்திலே ஒரு குயிலின் படம் வரைந்தான். என்ன ஆச்சரியம்! படம் பூர்த்தியான உடனே அந்தக் குயில் உயிர்பெற்று வானத்திலே பறந்தது! பறக்கும் போதே அழகாகப் பாடிற்று. மாலியாங் துள்ளிக் குதித்தான். மகிழ்ச்சியால் எழுந்து ஆடினான். அவன் ஆற்றங்கரைக்குப் போய்த் தண்ணீருக்கு அருகில் நின்றுகொண்டு காகிதத்தில் ஒரு மீன் வரைந்தான். அது உயிர்பெற்றுத் தண்ணீருக்குள் குதித்தது. பலவிதமாக அது மின்னிக்கொண்டு நீந்தி விளையாடியது. அதைக் கண்டும் மாலியாங் களித்துக் கூத்தாடினான்.

மாலியாங் மிகுந்த ஏழையல்லவா? அதனால் அவனுக்கு ஏழைகளின் கஷ்டம் நன்றாகத் தெரிந்திருந்தது. அந்த ஊரில் உள்ள ஏழைகளுக்கு அவன் உதவி செய்ய முன்வந்தான். நிலத்தை உழுவதற்கு யாரிடமாவது எருதுகள் இல்லையென்றால் அவர்களுக்கு முன்னால் சென்று மாலியாங் இரண்டு எருதுகளின் படம் வரைவான். உடனே அந்த எருதுகள் உயிர்பெற்று நிற்கும். வேண்டியவருக்கு அவற்றைக் கொடுப்பான். கலப்பை

இல்லாதவருக்குக் கலப்பை வரைந்து கொடுப்பான். இப்படி யாக யாருக்கு எது தேவையென்று தெரிகிறதோ அதையெல் லாம் தனது மந்திரத்தூரிகையின் சக்தியால் உண்டாக்கிக் கொடுத்தான். ஏழைகளெல்லாம் அவனை மனமார வாழ்த்தினார் கள். மாலியாங் இவ்வாறு உதவி செய்யும் செய்தி ஊர் முழு வதும் விரைவில் பரவிற்று.

அந்த ஊரிலே ஒரு பணக்காரன் இருந்தான். அவன் பேராசைக்காரன். அவன் மாலியாங்கின் மந்திரத்தூரிகையை அபகரித்துக் கொள்ள வேண்டுமென்று நினைத்தான். உடனே அவன் மாலியாங்கைத் தன்னிடம் வருமாறு ஓர் ஆளிடம் சொல்லியனுப்பினான்.

மாலியாங் வந்தவுடன், "டேய், எங்கே அந்த மந்திரத் தூரிகை? அதை என்னிடம் கொடு" என்று அதிகார தோர ணையில் கேட்டான். மாலியாங் ஏழையாக இருந்தாலும் பயப் படவில்லை. தூரிகையைக் கொடுக்க முடியாது என்று திதான மாகப் பதில் சொன்னான்.

பணக்காரனுக்கு மூக்கிற்குமேல் கோபம் வந்தது. அவன் மாலியாங்கை இருட்டான ஒரு அறைச்குள் தள்ளிக் கதவைப் பூட்டிவைத்தான். பட்டினி கிடந்து மாலியாங் வாடவேண்டும் என்பது அவனுடைய எண்ணம்.

அதனால் அவன் மூன்று நாட்கள் வரையில் அந்தப் பக்கம் எட்டிப் பார்க்கவேயில்லை. நான்காம் நாள் அவன் மெதுவாக வந்தான். அறையின் கதவு இடுக்கிலே உள்ளே பார்த்தான். அவன் எதிர்பார்த்ததுபோல மாலியாங் சோர்ந்து கிடக்கவில்லை. மாலியாங் ஒரு பட்டு மெத்தையிலே ஒய்யாரமாகப் படுத்திருந் தான். விளக்கு ஒன்று பிரகாசமாக எரிந்துகொண்டிருந்தது. பக்கத்திலே நான்கு தட்டுகளிலே ஆப்பிள், ஆரஞ்சு முதலான பழங்களும் வெவ்வேறுவிதமான பலகாரங்களும் குவிந் திருந்தன. மாலியாங் ஒரு ஆப்பிளைக் கையிலெடுத்து வாயிலே கொஞ்சங் கொஞ்சமாகக் கடித்துச் சுவைத்துக்கொண்டிருந் தான். வானம்பாடி ஒன்று அறைக்குள்ளே பறந்துகொண்டே பாடிக்கொண்டிருந்தது.

இவற்றையெல்லாம் பார்க்கப் பார்க்க பணக்காரனுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. அப்பொழுதுதான் அவனுக்கு மாலி யாங்கைப் பட்டினிபோட முடியாது என்கிற விஷயம் புலப் பட்டது. மாலியாங் தனது மந்திரத்தூரிகையின் உதவியால் தனக்கு வேண்டிய உணவுப்பொருள்கள், விளக்கு முதலிய எல்லாவற்றையும் உண்டாக்கிக்கொள்ள முடியும் என்பதை அவன் உணர்ந்தான். அவனுக்கு மேலும் கோபம் பொங்கிற்று. "டேய், சின்னப்பயலே, உன்னை இப்பொழுது சித்திரவதை செய்கிறேன் பார்" என்று கத்திக் கொண்டே அவன் தன்னு டைய ஆட்கள் மூன்று பேரை அழைத்துவரச் சென்றான்.

மாலியாங் கலக்கமடையவில்லை. அவன் ஏணி ஒன்று வரைந்தான். அது உண்மையான ஏணியாக மாறிற்று. அதைச் சுவரிலே சாத்தி அதன் மேலே ஏறிக் கூரையின் வழியாக அவன் வெளியே தப்பித்துக்கொண்டு போய் விட்டான். பணக் காரன் ஆட்களோடு திரும்பி வந்து பார்க்கும்பொழுது அறைக் குள்ளே ஏணிமட்டும் இருந்தது. ஆத்திரத்தோடு அவன் ஏணி மேலே அவசரம் அவசரமாகத் தாவி ஏறினான். அந்த அவசரத் திலே ஏணி சறுக்கிக் கீழே விழுந்தது. அவன் தொப்பென்று தரையில் விழுந்து புரண்டான். அவன் தலையிலே நன்றாக அடி பட்டு எலுமிச்சம்பழம்போலப் புடைத்துக்கொண்டது. அவனுக் குக் கோபம் இன்னும் அதிகமாயிற்று. அவன் வெளியே ஓடினான்.

இதற்குள் மாலியாங் தனது மந்திரத்தூரிகையின் உதவி யால் ஒரு குதிரையை உண்டாக்கி அதன்மேல் ஏறிக்கொண்டு புறப்பட்டான். அதைக் கண்டதும் பணக்காரன் தன்னுடைய குதிரையின்மேல் பாய்ந்து ஏறிக்கொண்டு மாலியாங்கைப் பிடிக்க வேகமாகத் தொடர்ந்தான். மாலியாங்குக்குக் குதிரைச் சவாரி செய்து பழக்கம் இல்லாததால் அவனால் குதிரையை வேகமாகச் செலுத்த முடியவில்லை. பின்னால் வரும் குதிரை நெருங்கிக்கொண்டேயிருந்தது. பணக்காரன் ஒரு ஈட்டியைத் தன் கையிலே ஓங்கிக்கொண்டிருந்தான். அதைக் கண்டதும் மாலியாங் மந்திரத்தூரிகையை எடுத்தான். காகிதத்திலே ஒரு வில்லும் ஒரு அம்பும் வரைந்தான். அவை உண்மையான

வில்லும் அம்புமாக மாறின. அவன் வில்லை யெடுத்து அம்பைத் தொடுத்துக் குறி பார்த்துப் பணக்காரன் மேல் விட்டான். அம்பு குறி தவறவில்லை. பணக்காரனுடைய மார்பிலே அது பாய்ந்தது. பணக்காரன் தரையிலே விழுந்து புரண்டான்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு மாலியாங்கிற்கு அந்த ஊரிலேயே இருக்கப் பிடிக்கவில்லை. அவன் ஊர் ஊராகச் சென்று பலருக்கும் உதவி செய்தான். கடைசியில் ஒரு பட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அந்தப் பட்டணத்திலே ஒரு கொடுங்கோலன் அரசு செய்து வந்தான். அவன் செய்கின்ற கொடுமையால் மக்கள் மிகவும் துன்பப்பட்டார்கள். அந்த அரசன் எப்பொழுது ஒழிவானோ என்று அவர்கள் எண்ணிக்கொண்டிருந்தார்கள். ஆனால் அதை வெளியில் யாரும் சொல்லவில்லை. அரசனிடத்திலே அவர்களுக்கு அவ்வளவு பயம்.

கொடுங்கோலனுக்கு மாலியாங்கைப் பற்றியும் அவனுடைய மந்திரத்தூரிகையைப் பற்றியும் தெரிந்தது. மந்திரத்தூரிகையை அவனிடமிருந்து கவர்ந்துகொள்ள உடனே அவன் திட்டமிட்டான். மாலியாங்கைத் தனது சபையிலே வரும்படி கட்டளையிட்டான். சபையின் நடுவிலே இரும்புக்கம்பிகளால் ஒரு கூடாரம் அமைக்கச் சொன்னான். மந்திரிகளுக்கும் பிரதானிகளுக்கும் எதற்காக அக்கூடாரம் என்று முதலில் விளங்கவில்லை. சிங்கம் புலிகளை அதற்குள் அரசன் விடச் சொல்லுவானோ என்று அவர்கள் பயந்தார்கள். இருந்தாலும் அரசனிடம் அதைப்பற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்ள அஞ்சினார்கள். அரசன் உத்திரவுப்படியே பலமான இரும்புக் கூடாரம் அமைத்தார்கள்.

மாலியாங் அரச சபையில் வந்து சேர்ந்தான். அரசன் முதலில் அவனை மிகவும் புகழ்ந்து பேசினான். "உனது திறமையைக் கண்டு களிக்க எனக்கு அடங்காத ஆசை உண்டாகிறது. இந்த இரும்புக் கூடாரத்திற்குள்ளே அமர்ந்து நீ உனது திறமையைக் காண்பிக்கவேண்டும்" என்று அரசன் மெதுவாகத் தன் கருத்தை வெளியிட்டான். கூடாரத்திற்குள்ளிருந்து கொண்டு ஒரு புலி வரைய வேண்டுமாம். இது அரசனுடைய விருப்பம். அரசனுடைய சூழ்ச்சி மாலியாங்கிற்கு

உடனே புரிந்துவிட்டது. கூடாரத்திற்குள்ளிருந்து புலி வரைந்தால் அந்தப் புலி உயிர்பெற்று வந்துவிடும். பிறகு அது மாலியாங்கையே எதிர்த்துப் பாய்ந்து கொன்று தின்றுவிடும். அவன் வெளியே வரமுடியாதபடி கூடாரத்தின் கதவை அரசன் வெளிப்பக்கத்திலே பூட்டியிருந்தான்.

அரசனுடைய சூழ்ச்சி தனக்குத் தெரிந்துவிட்டதாக மாலியாங் வெளியே காட்டிக்கொள்ளவில்லை. அவன் கொஞ்சமும் பதற்றமில்லாமல் கூடாரத்திற்குள் நின்று தனது மந்திரத் தூரிகையைக் கையில் எடுத்தான். ஆனால் அவன் காகிதத்திலே புலி வரையவில்லை. ஒரு நாகப்பாம்பை வரைந்து இரும்புக் கம்பிகளின் வழியாகக் காகிதத்தை அரசனுக்கு முன்னால் வெளியே வீசினான். நாகப்பாம்பு உயிர்பெற்று எழுந்து புஸ் புஸ் என்று சீறிக்கொண்டு அரசன்மேல் பாய்ந்தது. அரசன் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தோடினான். சேவகர்கள் பாம்பை அடித்துக் கொன்றிரா விட்டால் அது அரசனைக் கடித்திருக்கும். தன்னுடைய சூழ்ச்சியை மாலியாங் புரிந்துகொண்டான் என்று அரசனுக்கு விளங்கிவிட்டது. அதனால் அவன் மாலியாங்கை சமாதானப்படுத்த எண்ணினான். மாலியாங்கை இரும்புக் கூடாரத்திலிருந்து வெளிவரச் செய்து அவனை அரசன் தன் பக்கத்திலே சிம்மாசனத்திலே உட்கார வைத்துக் கொண்டான்.

"மாலியாங், உனக்கு என் மகளைக் கலியாணம் செய்து கொடுக்கிறேன். என் ராஜ்யத்திலும் பாதியை உனக்குக் கொடுக்கிறேன். நீ எனக்கு மருமகனாக இருந்து சந்தோஷமாக வாழவேண்டும்" என்று அரசன் கூறினான். புதிதாக ஏதோ ஒரு சூழ்ச்சியை அரசன் மனத்திலே எண்ணிகொண்டிருக்கிறான் என்று மாலியாங்கிற்குத் தோன்றியது. இருந்தாலும் அதை அவன் வெளியிலே காட்டிக்கொள்ளவில்லை. "சரி தங்கள் இஷ்டப்படியே நான் நடந்துகொள்கிறேன்" என்று அவன் பதில் கூறினான்.

அரசனுக்கு அளவில்லாத குதூகலம் ஏற்பட்டு விட்டது. மாலியாங் இரவிலே தூங்கும் போது அவனைக் கொன்றுவிட

அரசன் திட்டமிட்டிருந்தான். ஆனால் மாலியாங் ஏமாந்து விடவில்லை. அவனுக்கு ஒரு சூழ்ச்சி உதயமாயிற்று.

" அரசே, தாங்கள் என்னை மருமகனுக்கிக்கொள்ள விரும்பு வதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். அதனால் தங்களுக்கு ஒரு புதுவிதமான வேடிக்கை காட்ட நான் இப் பொழுது ஆசைப்படுகிறேன் " என்றான் அவன்.

"உனது ஆசைப்படியே செய். எனக்கு யாதொரு தடை யுமில்லை." என்று பதில் சொன்னான் அரசன்.

உடனே மாலியாங் ஒரு காகிதத்திலே மந்திரத்தூரிகையால் ஒரு கடல் வரைந்தான். அவர்களுக்கு எதிராக நீலக்கடல் ஒன்று தோன்றியது. அலைகள் மெதுவாக எழுந்து அரச னுடைய கால்களை வருடிக்கொண்டு கரையில் மோதின. பிறகு மாலியாங் ஒரு அழகான கப்பல் வரைந்தான். கடலிலே அந்தக் கப்பல் ஒரு மாய மாளிகையைப் போல மிதந்தது. நவரத்தினங் கள் எல்லாம் அதில் இருந்து ஒளிவிட்டன. இந்தக் காட்சியைக் கண்டு அரசன் பிரமித்துப்போனான்.

" அரசே, இந்தக் கப்பலில் ஏறிச் சிறிது நேரம் உல்லாச மாகக் கடலின்மேலே சென்று வாருங்கள். நான் ஒரு தென் றலை வரவழைக்கிறேன் " என்று மாலியாங் நயமாகக் கூறினான். அரசன் உடனே கப்பலில் ஏறிக் கொண்டான். மாலியாங் முதலில் தென்றல் காற்றைக் காகிதத்தில் வரைந்தான். உடனே தென்றல் எழுந்தது. அது கப்பலை மெதுவாகக் கரையிலி ருந்து கடலுக்குள்ளே செலுத்தியது. அரசன் மகிழ்ச்சியோடு துள்ளிக் குதித்தான். " பலே பலே, மாலியாங் " என்று கரை யில் நின்ற மாலியாங்கை நோக்கி உற்சாகத்தோடு கூறினான். ஆனால் அடுத்த கணத்திலே அவனுடைய மகிழ்ச்சியானது பயமாக மாறியது. ஏனென்றால் மாலியாங் தனது மந்திரத் தூரிகையைக் கொண்டு ஒரு கொடுமையானபுயலை வரைந்தான். அது நூற்றுக்கணக்கான மைல் வேகத்துடன் கிளம்பிற்று. கப்பலை ஒரேயடியாக அடித்துக் கொண்டு போய் நடுக் கடலில் கவிழ்த்தது. அரசன் கப்பலோடு கடலில் மூழ்கி மாண்டான்.

அரசன் மாண்டதை அறிந்த மக்கள் எல்லோரும் சந்தோஷப்பட்டார்கள். மாலியாங்கைப் பலவாறு புகழ்ந்து கொண்டாடினார்கள்.

மாலியாங் அந்த நகரத்தில் அதிக நாள் தங்கி இருக்க வில்லை. அவன் புறப்பட்டு ஊர் ஊராகச் சென்று ஏழை மக்களுக்கு உதவி செய்வதிலேயே தனது வாழ்நாளைக் கழிக்கலானான்.



# முச்சீ

இமய மலையின் வடபகுதியிலே பனி மலைகள் சூழ்ந்துள்ள ஒரு தேசம் இருக்கிறது. அதன் பெயர் திபெத்து. அங்கே யாலூங் என்ற ஒரு ஆறு உண்டு. அந்த ஆற்றின் கரையிலே முச்சீ என்ற பெயர் உள்ள ஒரு இளைஞன் தன் தாயாரோடு வசித்துவந்தான்.

முச்சீ மிகவும் ஏழை. அவனுக்குச் சொந்தமான நிலம் கிடையாது. அவன் குத்தகைக்குக் கொஞ்சம் நிலம் வாங்கி அதை மிகவும் சிரமப்பட்டு உழுது வாழ்க்கை நடத்தி வந்தான். அவனுடைய தாயாரும் காலையிலிருந்து பொழுது சாயும் வரையில் நிலத்தில் வேலை செய்தாள். அதனால் நிலம் நன்றாக விளைந்தது.

இதைக் கண்டு நிலத்தின் சொந்தக்காரனுக்குப் பொறாமை உண்டாயிற்று. அவன் தன் சொந்தப் பண்ணையிலே நிறைய ஆள் வைத்து விவசாயம் நடத்தினான். அதில் அவ்வளவு நன்றாக விளைச்சல் உண்டாகவில்லை. அதனால் அவனுக்கு முச்சீயிடம் பொறாமை ஏற்பட்டது. முச்சீயிடம் இரண்டு திபெத்து நாட்டு யாக் எருதுகள் இருந்தன. அவற்றை எப்படியாவது கவர்ந்துகொள்ளவேண்டுமென்று நிலச்சொந்தக்காரனுக்கு உள்ளுக்குள்ளே ஆசை.

அவனுடைய பெயர் காளிகங்கன். அவனுக்கு நிலம் ஏராளமாக உண்டு. பணமும் நிறைய உண்டு. அதனால் அவனைக் கண்டால் எல்லோரும் பயப்படுவார்கள்.

காளிகங்கன் ஒரு நாள் குதிரைமேல் ஏறிக்கொண்டு கங்கதிங்கம் என்ற ஊருக்கு புறப்பட்டான். அப்படிப் போகும் பொழுது முச்சீ மண்வெட்டியால் நிலத்தை வெட்டிக் கொண்டிருப்பதைக் கண்டான். உடனே அவன் முச்சீயின் எருதுகளைக்

கைப்பற்ற ஒரு தந்திரம் கண்டு பிடிக்கலானான். அவன் முச்சீயைப் பக்கத்தில் வருமாறு கூப்பிட்டான்.

"நான் கங்கதிங்கம் போய்விட்டு ஒரு வாரத்தில் வருவேன். அதுவரையிலும் நீ மண்வெட்டியைக் கொண்டு நிலத்தை எத்தனை தடவை வெட்டினாய் என்பதைக் கணக்கு வைத்து எனக்குச் சொல்லவேண்டும். கணக்குத் தவறினால் உன் எருதுகளை எனக்குக் கொடுத்துவிடவேண்டும்" என்று கூறிவிட்டுக் அவன் நின்று கூடப் பார்க்காமல் போய்விட்டான்.

முச்சீக்கு என்ன செய்வதென்றே தோன்றவில்லை. அவன் மண்வெட்டியை ஓங்கும்போதெல்லாம் ஒரு சிறு கல்லைத் தன் சட்டைப்பைக்குள் போட்டுக் கொண்டான். ஆனால் இப்படிச் செய்துகொண்டே அதிக நேரம் வேலை செய்ய முடியவில்லை. சட்டைப்பையில் உள்ள கற்கள் பெரிய பாரமாக ஆகிவிட்டன. மண்வெட்டியால் நிலத்தை வெட்டும் பொழுது அவை கீழே சிதறி விழவும் தொடங்கின. அதனால் கணக்கும் தவறலாயிற்று. வேலையும் வழக்கம் போல் நடக்கவில்லை. முச்சீ இவ்வாறு கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதைக் கவனித்த அவன் தாயாருக்கு அழுகை வந்துவிட்டது. "காளிகங்கன் எருதுகளைப் பிடித்துக்கொள்வானே, இனிமேல் நாம் எப்படி நிலத்தை உழுது சீவனம் செய்வோம்" என்று கூறிக் கொண்டே அவள் ஓலமிட்டுப் புலம்பினாள்.

"அம்மா, நீ வருத்தப்படவேண்டாம். ஆறு வற்றிப் போனாலும் மலை யுச்சியிலே பனிக்கட்டி



இருக்கிறது. அதன் உதவியால் நமக்குத் தண்ணீர் கிடைக்கும். அதைப்போலவே காளிகங்கனுடைய சூழ்ச்சியை உடைத்தெறிய நமக்குத் தெரியாவிட்டாலும் மற்றவர்களுக்குத் தெரியலாம். நான் அண்டை வீட்டுக்காரர்களிடம் பேசி வருகிறேன். நீ கவலைப்படாதே'' என்று முச்சீ கூறிவிட்டுப் போனான். அண்டைவீட்டுக்காரர்கள் அவனுக்கு நல்ல தந்திரம் ஒன்றைச் சொல்லிக்கொடுத்தார்கள். "குள்ளநரியின் தந்திரத்தை அதை விடப் பெரிய தந்திரத்தால்தான் வெல்ல முடியும். அப்படி நீ இந்தத் தந்திரத்தைச் செய்'' என்று அவர்கள் சொல்லி அனுப்பினார்கள்.

முச்சீயின் கவலை நீங்கிற்று. அவன் மண்வெட்டியை ஓங்கும் போதெல்லாம் கணக்கு வைக்காமல் வழக்கம்போல வேலை செய்யலானான்.



ஒரு வாரம் கழித்து காளிகங்கன் திரும்பிவந்தான். "முச்சீ, எங்கே உன்னுடைய கணக்கு? சரியாகச் சொல்லாவிட்டால் எருதுகள் எனக்கு சொந்தம்'' என்று அவன் அதட்டினான். அதைக் கண்டு முச்சீ பயப்படவில்லை. "இதோ என் கணக்கு. நீங்கள் கங்க திங்கம் போய்த் திரும்பிவருகிற வரையில் உங்களுடைய குதிரை எத்தனை தடவை காலெடுத்து வைத்ததோ அத்தனை தடவை நான் மண்வெட்டியை ஓங்கினேன்'' என்று அவன் பதில் சொன்னான்.

காளிகங்கன் திகைத்துப்போனான். இப்படிப்பட்ட பதிலை அவன் எதிர்பார்க்கவே இல்லை. அதனால் அவன் தேள் கொட்டிய திருடன்போல மௌனமாகத் தன் வீட்டுக்குத் திரும்பிப் போனான். இருந்தாலும் அவனுக்கு எருதுகளைக் கவர்ந்து கொள்ள வேண்டுமென்ற ஆசை மறையவில்லை. அதற்கு அவன் நல்ல சமயம் பார்த்துக் கொண்டிருந்தான்.

சில நாட்களுக்குப் பிறகு காளிகங்கன் மறுபடியும் கங்கதிங்கத்திற்குப் புறப்பட்டான். அவன் குதிரையில் சவாரி செய்யும் போது முச்சீயும் அவன் தாயாரும் நிலத்திலே கல் பொறுக்கிக் குவியலாகப் போட்டுக்கொண்டிருந்தார்கள்.

"டேய், முச்சீ, நான் கங்கதிங்கத்திலிருந்து திரும்பி வந்தவுடன் நீ எனக்குக் கல்லிலே நூல் எடுத்து ஒரு கைக்குட்டை செய்து கொடுக்க வேண்டும். இப்பொழுதே வேலை தொடங்கு. இல்லாவிட்டால் உன் எருதுகளைப் பிடித்துக் கொண்டு போய்விடுவேன்" என்று உரத்த குரலில் கூறிவிட்டு வேகமாகப் போய்விட்டான்.

கல்லிலே எப்படி நூல் உண்டாக்க முடியும்? இப்படிச்செய்ய முடியாத காரியத்தைச் செய்யச் சொல்லிப் பண்ணைக்காரன் உத்தரவிட்டுப் போனதை நினைத்துத் தாயார் தேம்பினாள். அவள் கண்களில் நீர் தாரைதாரையாக வழிந்தது. எருதுகள் போய் விடுமே என்று விம்மினாள்.

முச்சீ அவளுக்குத் தேறுதல் சொல்லிவிட்டுப் புறப்பட்டான். மறுபடியும் அண்டை வீட்டுக்காரர்களுடைய ஆலோசனையை நாடினான். பிறகு கவலையேதும் இல்லாமல் காளிகங்கனுடைய வருகையை எதிர்பார்த்திருந்தான்.

காளிகங்கன் பத்து நாட்களில் திரும்பினான். "எங்கே கைக்குட்டை ?" என்று அதிகாரத்தோடு முச்சீயைக் கேட்டான். இந்தத் தடவை எருதுகள் தனக்குக் கிடைத்துவிடும் என்று அவனுக்கு உள்ளுக்குள்ளே குதூகலம்.

"கைக்குட்டை தயாராகிவிட்டது. ஆனால்அதில் பூவேலை செய்யவில்லை. உங்களைப் போன்ற பணக்காரர்கள் பூவேலையில்லாத கைக்குட்டையை வைத்துக்கொள்ள மாட்டார்கள். அதனால்

பூவேலைக்காகத் தங்களை எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறேன். கல்லில் நூலுண்டாக்கிச் செய்யும் கைக்குட்டைக்கு நட்சத் திரத்தை வைத்துப் பூவேலை செய்தால்தான் நன்றாக இருக்கும். ஆகையால் நட்சத்திரத்தைப் பறித்துக் கொடுங்கள்'' என்று அவன் வினயமாகப் பதில் சொன்னான்.

காளிகங்கனுக்கு வாய் அடைத்துப் போய்விட்டது. அவன் ஊமையைப் போல ஒன்றும் பேசாமல் போய்விட்டான். ஆனால் அவன் உள்ளத்திலே கோபம் கொழுந்துவிட்டு எரிந்தது.

அன்று இரவு அவன் சில ஆட்களைக் கூட்டிக்கொண்டு முச்சீயின் வீட்டிற்குள் நுழைந்தான். உறங்கிக்கொண்டிருந்த முச்சீயின் கைகளையும் கால்களையும் கட்டினார்கள். அவனுடைய தாயார் அவர்களுக்கு மத்தியிலே புகுந்து தடுக்க முயன்றாள். காளிகங்கனும் அவனுடைய ஆட்களும் சேர்ந்து அவளை அடித்தனர்; அவள் மூர்ச்சைபோட்டுக் கீழேவிழுந்தாள். பிறகு முச்சீயைத் தூக்கி வரும்படி காளிகங்கன் கட்டளையிட்டான். எருதுகளை ஓட்டிக்கொண்டுவரும்படியும் சொன்னான்.

முச்சீயை ஒரு மலைச்சிகரத்திற்குத் தூக்கிச் சென்றார்கள். அங்கே அவனைப் படுக்கவைத்து அவன் தூங்கும்போது கீழே உருட்டித் தள்ளிவிட வேண்டும் என்பது காளிகங்கனது எண் ணம். அதற்காக அவனை மலையுச்சியிலே ஒரு செங்குத்தான பாறையின் ஓரத்தில் கிடத்தினார்கள். அப்பொழுது அவன் விழித்துக்கொண்டிருந்தபடியால் அப்படியே விட்டுவிட்டுக் காளி கங்கனும் அவனுடைய ஆட்களும் ஓய்வு எடுத்துக்கொண்டார் கள். இரண்டு ஆட்கள் ஒரு பெரிய பெட்டியைத் தூக்கிக் கொண்டுவந்திருந்தார்கள். அதற்குள்ளே உணவுப்பொருள் கள் இருந்தன. அவற்றைக் கொண்டு அந்த இரண்டு பேரும் விருந்து தயார் செய்யத் தொடங்கினார்கள்.

காளிகங்கனுக்குப் பெரிய தொந்தி இருந்தது. அதனால் மிகவும் சிரமப்பட்டு மலையேறினான். அவன் உடம்பெல்லாம் வலித்தது. களைப்பினால் அவன் அப்படியே படுத்துத் தூங்கிப் போய்விட்டான். அவன் தூங்குவதைக் கண்டு, மற்ற ஆட் களும் அப்பொழுது தயாராக இருந்த உணவைத் தொடாமல் பாத்திரங்களிலே வைத்து விட்டுத் தூங்கலானார்கள்.

முச்சீக்கு நல்ல தருணம் கிடைத்தது. அவன் எப்படியோ கஷ்டப்பட்டுத் தன் கைக்கட்டுகளை அவிழ்த்துக்கொண்டான். பிறகு கால் கட்டுகளை அவிழ்க்க முடியாதா என்ன? அது சுலபமாக முடிந்தது. அவன் மெதுவாக உணவுப்பெட்டியைக் கொண்டுவந்து தான் படுத்திருந்த இடத்தில் வைத்து அதன் மேலே தனது மேலங்கியைப்போட்டு மூடிவிட்டான். காளிகங்கனுடைய ஆள் ஒருவனுடைய குல்லாயைத் தன் தலையில் வைத்துக்கொண்டான். பிறகு அமைதியாக உட்கார்ந்து உணவை நன்றாகச் சாப்பிடத் தொடங்கினான்.

காளிகங்கன் அரைத்தூக்கத்தோடு விழித்துப் பார்த்தான். முச்சீ பாறையோரத்திலே அசைவில்லாமல் நன்றாகத் தூங்குவதுபோல அவனுக்குத் தோன்றியது. உடனே அவன் அந்த இடத்திற்குச் சென்று உணவுப்பெட்டியைக் காலால் உதைத்துத் தள்ளினான். அது வெகுதூரம் கீழே சென்று தொப்பென்று விழுந்தது. "சனியன் தொலைந்தான்" என்று கூறிக்கொண்டே மகிழ்ச்சியோடு திரும்பிவந்து காளிகங்கன் மறுபடியும் படுத்துக் கொண்டான். உணவு சாப்பிடுகிற முச்சீயைத் தன்னுடைய ஆட்களில் ஒருவன் என்று நினைத்துக்கொண்டு அவன், "நன்றாகச் சாப்பிடு, நன்றாகச் சாப்பிடு. நான் இன்னும் கொஞ்ச நேரம் தூங்விட்டுப் பிறகு வருகிறேன்" என்று கூறிவிட்டுத் தூங்கிவிட்டான். அவன் மறுபடியும் எழுந்திருப்பதற்குள் முச்சீ அந்த இடத்தைவிட்டு நழுவிவிட்டான்.

மறுநாள் காளிகங்கனைத் தேடிக்கொண்டு முச்சீ அவன் மாளிகைக்குப் போனான்.

"நன்றாகச் சாப்பிடும்படி சொன்னதற்கு நான் நன்றிகூற வந்தேன்" என்று அவன் தைரியமாகச் சொன்னான். காளிகங்கனுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. இருந்தாலும் அவன் அதை வெளியில் காட்டிக்கொள்ளவில்லை. முச்சீயை அன்போடு தன் மாளிகைக்குள்ளே அழைத்தான். "இந்தா, இந்தத் தங்கத்தாயத்தை வைத்துக்கொள்" என்று நாய் வடிவத்தில் இருந்த ஒரு தாயத்தை அவனிடம் கொடுத்தான்.

நாய் வடிவத்தில் உள்ள தாயத்தைக் கழுத்தில் அணிந்து கொண்டால் பல நன்மைகள் உண்டாகும் என்பது திபெத்து

நாட்டிலே ஒரு நம்பிக்கை. பேய், பிசாசு எதுவும் பக்கத்தில் வராது என்றும் சொல்வார்கள். அதனுல் முச்சீ அந்தத் தாயத்தை ஆவலோடு வாங்கிக்கொண்டான். உடனே காளிகங்கன் உரத்துக் கூவத் தொடங்கினுன். "டேய் திருடா! என் தாயத் தைத் திருடிக்கொண்டாயா? இவனைப் பிடியுங்கள், கட்டுங்கள்" என்று கத்தினுன். வேலைக்காரர்கள் ஓடிவந்து முச்சீயைப் பிடித்துக் கட்டினுர்கள்.

"பகலிலேயே திருடுகிருயா? உனக்கு நல்ல பாடம் கற்பிக்கி றேன் பார்" என்று சொல்லி காளிகங்கன் முச்சீயை யாலூங் ஆற்றின்மேலிருந்த ஒரு பாலத்திற்கடியில் கட்டிவைத்தான். பாலத்தை முதுகிலே சுமப்பவனைப்போல முச்சீ பாலத்தின் அடிப்பாகத்தில் கட்டுண்டு கிடந்தான். அவனுக்கு உதவி செய்ய அங்கு யாருமே வரவில்லை. முச்சீக்குக்கீழே ஆற்றுத் தண்ணீர் கொந்தளித்துக்கொண்டு ஓடிற்று. முச்சீ ஒரு பாட்டைப் பாடிக் கொண்டே அழுது புலம்பினுன். அவனுடைய தாயாரின் நினைவும் அவனுக்கு வந்தது. துக்கம் தொண்டையை அடைத் தது. அவனுல் பாடக்கூட முடியவில்லை.

அந்தச் சமயத்திலே கலாவங்கன் அங்கே குதிரைமேல் வந்தான். அவன் காளிகங்கனுடைய தம்பி. பல ஆண்டுகளுக்கு முன் இந்தியாவிற்குச் சென்றுவிட்டு அப்பொழுதுதான் அவன் திரும்பி வந்துகொண்டிருக்கிருன். பாலத்தின் அடிப் பாகத்தில் ஒருவன் கட்டுண்டு கிடப்பதைக் கண்டு அவனுக்கு ஆச்சரியம் உண்டாயிற்று.

"யாரங்கே? அங்கே என்ன செய்கிருய்?" என்று அவன் கேட்டான்.

"நான் முதுகு பலமடையச் செய்துகொண்டிருக்கிறேன்" என்ருன் முச்சீ.

நெடுந்தூரம் குதிரைமேல் சவாரி செய்ததால் கலாவங்க னுக்கு முதுகு வலித்தது. தானும் முதுகுக்கு பலம் கொடுக்க விரும்பினுன். "என்னையும் பாலத்துக்கு அடியில் கட்டிவைத்து அந்த வித்தையைக் கற்றுக்கொடுப்பாயா?" என்று அவன் கேட்டான்.

"பணக்காரர்களுக்கு இந்த வித்தை வராது. ஆனால் கொஞ்சம் சிரமப்பட்டுக் கற்றுக்கொண்டால் பிறகு முதுகுவலியே வராது" என்று முச்சீ பதில் சொன்னான். கலாவங்கனுக்கு ஆசை அதிகரித்துவிட்டது. "எப்படியாவது எனக்குச் சொல்லிக் கொடு. என்னுடைய தங்கத்தாயத்தை உனக்குக் கொடுக்கிறேன்" என்று அவன் கூறினான்.

"நீ வற்புறுத்திக் கேட்பதால் உனக்குச் சொல்லிக் கொடுக்கிறேன். முதலில் என்னை அவிழ்த்துவிடு. தங்கத்தாயத்தையும் என் கையில் கொடு" என்று முச்சீ சொன்னான்.

கலாவங்கனைப் பாலத்தின் அடிப்பாகத்தில் கட்டி வைத்து விட்டு முச்சீ புறப்பட்டான். புறப்படுமுன் "யாரென்ன கேட்டாலும் நீ பதில் பேசாதே. பதில் பேசினால் எல்லாம் கெட்டுப் போகும்" என்று எச்சரிக்கை செய்துவிட்டு அவன் போய் விட்டான்.

பொழுது விழுந்தது. இருள் எங்கும் பரவிற்று. அந்த வேளையிலே காளிகங்கன் பாலத்திற்கு வந்தான். கத்தியை எடுத்துக் கயிற்றை அறுத்தான். அறுக்கவே அதில் கட்டப் பட்டியிருந்த கலாவங்கன் ஆற்று வெள்ளத்திலே வீழ்ந்து மூழ்கி மறைந்தான். "தொலைந்தான் முச்சீ" என்று கூறிக் கொண்டே காளிகங்கன் களிப்போடு வீட்டிற்குத் திரும்பினான்.

மறுநாள் காலையிலே முச்சீ தங்கத்தாயத்தைக் கையில் ஏந்திக் கொண்டு அவனிடம் சென்றான்.

"நீ எப்படியடா வந்தாய்?" என்று ஆச்சரியத்தோடு காளிகங்கன் கேட்டான்.

"நீங்கள் ஆற்றிலே என்னைத் தள்ளியது மிக நல்ல காரியம். அதனால் நான் பெரிய பணக்காரன் ஆகிவிட்டேன். இதோ பாருங்கள் தங்கத்தாயத்து" என்றான் முச்சீ.

காளிகங்கனுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. பணம் என்ற சொல்லைக் கேட்டதும் அவன் நாக்கில் நீர் ஊறிற்று. "எப்படிப் பணக்காரன் ஆனாய்?" என்று ஆவலோடு கேட்டான்.

"பாலத்திலிருந்து விழுகிறவர்களையெல்லாம் பணக்காரனாக்க ஆற்றுத் தேவதை திட்டமிட்டிருக்கிறது. நான் ஆற்றில்

விழுந்தவுடனே அந்தத் தேவதை தோன்றி என்னை அத னுடைய அரண்மனைக்கு அழைத்துச் சென்றது. ஏராளமான நவரத்தினங்களையும், தங்க நகைகளையும் எனக்குக் கொடுத்தது. அவற்றை யெல்லாம் என்னால் எடுத்துக்கொண்டுவர முடிய வில்லை. இந்தத் தாயத்தை மட்டும் கொண்டு வந்தேன்'' என்று கூறிவிட்டு அவன் தாயத்தை எடுத்துச் சூரிய வெளிச்சத்தில் பிரகாசிக்கும்படி ஆட்டிக் காண்பித்தான். பேராசைக்காரனான காளிகங்கனுக்குப் பைத்தியம் பிடித்துவிடும்போல் இருந்தது.

''நான் போனால் எனக்கும் கிடைக்குமா?''

''பணக்காரர்களுக்குத்தான் அங்கு நல்ல வரவேற்புக் கிடைக்குமாம். நீங்கள் போனால் ஆற்றுத் தேவதைக்கு ரொம்பவும் சந்தோஷமாக இருக்கும்''.

முச்சீ இவ்வாறு கூறியதைக் கேட்டதும் காளிகங்கனுக்கு உற்சாகம் பொங்கிக்கொண்டு வந்தது. பாலத்தில் இருந்து தன்னை ஆற்றுக்குள்ளே தள்ளும்படி முச்சீயை வேண்டிக் கொண்டான். முச்சீ அவன் விரும்பியவாறே செய்து முடித்தான். இதைக் காண்பதற்காக காளிகங்கனுடைய உறவினர்களும், நண்பர்களும் அங்கே ஓடிவந்தார்கள். காளிகங்கனுக்கு மட்டும் நிறையப் பொருள் கிடைக்கப்போவதை நினைத்து அவர்களுக்குப் பொறுமை உண்டாயிற்று. அதை உணர்ந்துகொண்ட முச்சீ ''நீங்கள் கவலைபட்ட வேண்டாம். அவரால் எல்லாவற்றையும் தூக்கிக்கொண்டு வரமுடியாது. ஆற்றில் முழுகியதும் அவர் கைகளை ஆட்டி உங்களையெல்லாம் வரும்படி சைகை காட்டு வார். நீங்கள் விரும்பினால் நீங்களும் ஆற்றில் குதித்து வேண்டிய பொருளை எடுத்துக்கொள்ளலாம்'' என்று அவன் தெரிவித்தான்.

காளிகங்கன் ஆற்றில் வீழ்ந்ததும் ஏமாற்றம் அடைந்தான். அங்கே ஆற்றுத் தேவதை வரவில்லை. ஆற்றுவெள்ளம்தான் வாயிலும் மூக்கிலும் ஏற ஆரம்பித்தது. தான் ஏமாந்துபோன தை அவன் உணர்ந்தான். தன்னைக் காப்பாற்றும்படி கைகளை ஆட்டி ஆட்டி எல்லோரையும் அழைத்தான். வாய்க்குள்ளே தண்ணீர் புகுந்ததால் அவனால் பேசமுடியவில்லை. அவன் கைகளை வேகமாக ஆட்டுவதைக் கண்டதும் உறவினர்களும், நண்பர்களும் சற்றும் தாமதம் செய்யாமல் ஆற்றிலே குதித்

தார்கள். ஆற்று வெள்ளம் எல்லோரையும் அடித்துச் சென்றது.

புலி வாயிலிருந்து தப்பிய ஆட்டைப்போல முச்சீ தன் வீடு திரும்பினன். இப்பொழுது அவனுக்கு யாரும் பகைவர் இல்லை. அவன் அமைதியாக நிலத்தை உழுது பயிர்செய்து வாழத் தொடங்கினன்.



# இந்தாப் பாட்டியும் இல்லைப் பாட்டியும்

ஓர் ஊரிலே இரண்டு கிழவிகள் இருந்தார்கள். இரண்டு பேருக்கும் ரொம்ப வயதாகிவிட்டது. அவர்களுக்கு எத்தனை வயதென்று கூட யாருக்கும் தெரியாது. அவர்கள் குடியிருந்த வீடுகள் அந்த ஊரின் ஒரு கோடியிலே எதிர் எதிராக இருந்தன. இரண்டு வீடுகளும் பார்ப்பதற்கு ஒரே மாதிரியாக இருக்கும். ஆனால் அந்தக் கிழவிகள் அப்படி ஒரே மாதிரியாக இருக்கவில்லை. அவர்கள் உருவம் ஒரே மாதிரி தான் இருந்தது; ஆனால் குணம் வேறு வேறாக இருந்தது.

ஒரு கிழவி எல்லோரிடத்திலும் அன்போடிருப்பாள். யார் எதைக் கேட்டாலும், "இந்தா, எடுத்துக்கொள்" என்று சிரித்த முகத்தோடு கொடுப்பாள். அதனால் குழந்தைகள் அவளை 'இந்தாப்பாட்டி' என்று கூப்பிடுவார்கள்.

எதிர் வீட்டிலிருக்கும் மற்றொரு கிழவி பொல்லாதவள். யாருக்கும் எதுவும் கொடுக்கமாட்டாள். ஏதாவது வேண்டுமென்று யாராவது அவளிடம் போனால் அவள் உடனே, 'இல்லை' என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு சொல்லுவாள். அதனால் குழந்தைகள் அவளுக்கு 'இல்லைப்பாட்டி' என்று பெயர் வைத்தார்கள்.

ஒரு நாள் ஒரு சிட்டுக்குருவி இந்தாப்பாட்டியின் வாசலிலே உட்கார்ந்து இரை தேடிக் கொண்டிருந்தது. அதைக் கண்ட சிறுவன் ஒருவன் விளையாட்டாக அதன்மேலே கல்லை வீசினான். அந்தக் கல் குருவியின் முதுகிலே பலமாகப்பட்டது. அதனால் பெரிய காயம் ஏற்பட்டு அதிலிருந்து இரத்தம் வழிய ஆரம்பித்தது. சிட்டுக்குருவி பறந்தோட முடியாமல் அப்படியே சாய்ந்து



படுத்துக் கிடந்தது. இறக்கைகளைப் பட பட வென்று அடித்துக்கொண்டு துடித்தது.

வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்த இந்தாப் பாட்டி அதைப் பார்த்து விட்டாள். அந்தக் குருவி படுகின்ற வேதனையைக் கண்டு அவளால் பொறுக்கமுடியவில்லை. அவள் கண்களிலே கண்ணீர் பெருகிற்று. அவள் குருவியை அன்போடு எடுத்தாள். காயத்திற்கு மருந்து தடவினாள். குருவிக்குத் தண்ணீரும் அரிசியும் கொடுத்தாள். குருவியின் துன்பம் ஓரளவிற்கு நீங்கிற்று. இருந்தாலும் அதனால் பறக்க முடியவில்லை. அசையாமல் படுத்துக் கிடந்தது.

இந்தாப்பாட்டி அதைத் தன் வீட்டிலேயே வைத்துக் காப்பாற்றி வந்தாள். நல்ல நல்ல இரையும் கொடுத்தாள்.

சில நாட்களிலே சிட்டுக்குருவியின் காயம் ஆறிற்று. உடம்பில் வலிமை ஏற்பட்டது. அதனால் அது கிழவியின் வீட்டை விட்டுப் பறந்து போய்விட்டது. ஆனால் அது கிழவியை மறக்கவில்லை.

ஒரு நாள் அது எங்கிருந்தோ திடீரென்று பறந்து வந்தது. இந்தாப்பாட்டியின் முன்னால் உட்கார்ந்தது. அதன் வாயில்

வைத்திருந்த சுரைக்காய் விதை ஒன்றைக் கீழே போட்டது. பிறகு வெளியே பறந்து சென்றது.

இந்தாப்பாட்டி மிகுந்த மகிழ்ச்சியோடு விதையைக் கையில் எடுத்துக்கொண்டாள். தன் வீட்டிற்குப் பின்னுலிருந்த காலி யிடத்தில் அதை முளேக்கப் போட்டாள்.

அதிலிருந்து உண்டான செடியில் சுரைக்காய் ஏராளமாகக் காய்த்தது. காய் வெகு ருசி. கிழவி சிட்டுக்குருவியை நினைத் துக்கொண்டே காய்களேச் சமைத்துச் சாப்பிட்டாள். பக்கத்து வீட்டுக்காரர்களுக்கெல்லாம் சுரைக்காய் வழங்கினுள். எல்லோ ரும் அதைத் தின்று சந்தோஷப்பட்டார்கள்.

ஒரு பெரிய காயை மட்டும் இந்தாப்பாட்டி செடியிலிருந்து பறிக்கவில்லே. விதைக்காக அதை அப்படியே விட்டு வைத் திருந்தாள். அது நாளடைவிலே நன்ருக முற்றிக் காய்ந்து பக்குவமாகத் தொங்கிற்று. அதன் பிறகுதான் கிழவி அதைப் பறித்து வீட்டுக்குக் கொண்டு போனுள். அது மிகவும் கனமாக இருந்தது. காய்ந்துபோன சுரைக்காய் லேசாக இருக்கும். ஆனுல் இது கனமாக இருப்பதைக் கண்டு கிழவி ஆச்சரிய மடைந்தாள். சுரைக்காயின் மேல்பாகத்திலே வட்டமாக அறுத் தெடுத்தாள். ஆகா, என்ன அதிசயம்! உள்ளே நிறைய அரிசி இருந்தது.

இந்தாப்பாட்டி அரிசியைக் கீழே கொட்டினுள். கொட்டக் கொட்ட சுரைக்காயில் அரிசி நிறைய இருந்துகொண்டே



இருந்தது. வீடு முழுவதும் அரிசி குவிந்துவிட்டது. அப்பொழுதும் சுரைக்காயில் அரிசி குறையவில்லை. கீழே கொட்டக் கொட்ட நிறைந்துக்கொண்டே இருந்தது.

இந்தாப்பாட்டி அரிசியை எல்லோருக்கும் வாரி வாரிக் கொடுத்தாள். எல்லோருக்கும் நல்ல உணவு கிடைத்தது. எல்லோரும் அவளை வாழ்த்தினார்கள். இல்லைப்பாட்டிக்கு இந்த விஷயம் தெரிந்தது. அவள் எப்படியோ தந்திரமாகப் பேசி இந்தாப்பாட்டிக்கு ஏராளமாக அரிசி கிடைக்கின்ற இரகசியத்தைத் தெரிந்துகொண்டாள். தானும் அவ்வாறு சிட்டுக் குருவிக்கு உதவி செய்து சுரை விதை பெறவேண்டும் என்று தீர்மானித்தாள்.

அதுமுதல் அவள் தினந்தோறும் தன் வீட்டுக்கு முன்னால் நின்று பார்த்துக் கொண்டிருப்பாள். தினமும் பல சிட்டுக் குருவிகள் அங்கே உட்கார்ந்து இரை தேடிக்கொண்டும், விளையாடிக்கொண்டும் இருக்கும். சிறுவர்கள் தெருவிலே ஓடி ஆடி விளையாடுவார்கள். சில சமயங்களிலே குருவிகளின் மீது கல்லை வீசுவார்கள். ஆனால் ஒரு கல்லும் அவைகளைக் காயப் படுத்தவில்லை.

இல்லைப்பாட்டிக்கு ரொம்பக் கோபம். ஒரு பையனாவது சரியாகக் குறிபார்த்து அடிக்கவில்லையே என்று அவர்களை வைதாள். கடைசியில் அவளே குருவிகளின் மீது கல்லை வீச ஆரம்பித்தாள். எப்படியோ ஒரு கல் ஒரு சிட்டுக்குருவியின் முதுகில் பட்டு அதன் இறகு ஒடிந்துவிட்டது. இல்லைப் பாட்டிக்கு ஒரே ஆனந்தம். குருவி துடித்துக் கொண்டு தரையிலே கிடந்தது.

அவள் அந்தக் குருவியை வீட்டுக்குள் எடுத்துச் சென்றாள். ஒடிந்த இறகுக்கு மருந்து போட்டாள். குருவிக்கு இரையும் வைத்தாள.

கொஞ்ச நாளில் காயம் ஆறிற்று. குருவி பறந்தோடி விட்டது. சில நாட்களுக்குப் பிறகு அந்தக் குருவியும் ஒரு சுரை விதையைக் கொண்டுவந்து இல்லைப் பாட்டியின் முன்னால் போட்டது. கிழவி மகிழ்ச்சியோடு அந்த விதையை எடுத்து வீட்டுக் கொல்லையில் போட்டுத் தண்ணீர் ஊற்றினாள்.

சுரை முளைத்துப் படர்ந்து காய்த்தது. பெரிய பெரிய காய்கள் கிடைத்தன. ஒன்றை மட்டும் விதைக்காக விட்டு விட்டு மற்றவற்றைக் கிழவி பறித்துக் கொண்டாள். பக்கத்து வீட்டுக்கெல்லாம் கொடுத்தாள்.

இல்லைப்பாட்டி இப்படித் தானம் கொடுக்கிறதைக் கண்டு எல்லோருக்கும் ஆச்சரியமாக இருந்தது. ஏனென்றால் அவள் யாருக்கும் எதுவும் கொடுக்க மாட்டாள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் அவள் கொடுத்த சுரக்காயைச் சமைத்து வாயில் போட்டதும் எல்லோருக்கும் கோபம் பொங்கிற்று. சுரைக்காய் ஒரே கசப்பு. அவர்கள் கிழவியிடம் ஓடி வந்தார்கள். "பேய்ச் சுரைக்காயைக் கொடுத்து எங்களை ஏமாற்றினயா ?" என்று அவர்கள் அவளை நன்றாகத் திட்டினார்கள்.

இல்லைப்பாட்டியும் ஒரு சுரைக்காயைச் சமைத்துக் கை நிறைய எடுத்து வாயில் போட்டதும் முகத்தைச் சுளித்தாள். அவளுக்கு என்னவோ மாதிரி இருந்தது. தலை சுற்றிற்று. கடைசியில் படுக்கையிலே படுத்துவிட்டாள். வயிற்றிலே அவளுக்கு வலியேற்பட்டது.

பல நாட்களுக்குப் பிறகுதான் அவளுக்கு ஒருவாறு குணம் ஏற்பட்டது. அவள் எழுந்து சென்று காய்ந்து தொங்கிக் கொண்டிருந்த விதைச் சுரைக்காயை அறுத்து வந்தாள். அது கனமாக இருந்தது. ஆவலோடு அதன் மேல் பாகத்தை வட்டமாக அறுத்து எடுத்தாள். சுரைக்காய்க்குள் அரிசியிருக்குமென்று கையைவிட்டாள். வெடுக்கு வெடுக்கென்று உள்ளேயிருந்த தேள்களும் நட்டுவாக்களிகளும் அவள் கையில் கொட்டின. "ஐயோ ஐயோ" என்று கூவிக்கொண்டே இல்லைபாட்டி தரையில் சாய்ந்தாள்.

அவள் வீடு முழுவதும் தேள்களும் விஷப்பூச்சிகளும் அங்குமிங்கும் ஓடின. பக்கத்து வீட்டுக்காரர்கள் இல்லைப்பாட்டியின் கூக்குரலைக் கேட்டு மெதுவாக வந்து பார்த்தார்கள். கிழவியின் பரிதாப நிலையைக் கண்டு அவர்கள் மனம் இளகிற்று. கசப்புச் சுரைக்காயை அவள் கொடுத்ததை மறந்துவிட்டு அவர்கள் அவளுக்கு உதவி செய்ய முன்வந்தார்கள்.

இல்லைப்பாட்டி சிட்டுக்குருவியின் இறக்கையின் . மீது வேணுமென்றே கல்லை வீசி அதை முறித்ததையெல்லாம் அவள் வாயிலிருந்தே அவர்கள் அறிந்தார்கள். உண்மையை எல்லோருக்கும் சொல்லும்போதுதான் தேள் கொட்டின வலி கிழவிக்குக் கொஞ்சங் கொஞ்சமாக நீங்கத் தொடங்கியது. "இனிமேல் அப்படிச் செய்யவே மாட்டேன்; எனக்குப் புத்தி வந்துவிட்டது" என்று அவள் குழறிக் குழறி எல்லோரிடமும் சொல்லிக்கொண்டே இருந்தாள். அதைக கேட்டுச் சிரிப் பதற்காகச் சிறுவர்களும் சிறுமிகளும் அவள் வீட்டைத் தேடி நாள்தோறும் வந்துகொண்டே யிருந்தார்கள்.



# பேய் கொடுத்த பணம்

ஓர் ஊரில் இரண்டு சோம்பேறிகள் இருந்தார்கள். அவர்கள் ஒரு வேலையும் செய்யமாட்டார்கள். எல்லோரையும் ஏமாற்றியே பிழைப்பு நடத்தவேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தார்கள்.

அந்தச் சோம்பேறிகளில் ஒருவன் எத்தன். மற்றொருவன் தசுக்கன். இப்படிப் பெயர் வைத்து அவர்களை எல்லோரும் கூப்பிடுவார்கள்.

அந்த ஊரில் புதன்கிழமைதோறும் சந்தை கூடும். எல்லோரும் தங்கள் நிலத்திலே விளைந்த பொருள்களைச் சந்தையில் கொண்டுபோய் விற்பார்கள். விற்றுக் கிடைத்த பணத்தைக் கொண்டு தங்கள் வீட்டிற்குத் தேவையான சாமான்களை வாங்கிக் கொள்வார்கள்.

ஒரு புதன்கிழமையன்று வழக்கம்போல் சந்தை கூடியது. எத்தன் ஒரு கோணிப்பையில் நிறைய வரண்ட சருகுகளைப் போட்டுக்கொண்டான். மேலே மட்டும் கொஞ்சம் வேர்க் கடலையைப் பரப்பி வைத்தான். அந்த மூட்டையைத் தூக்கிக் கொண்டு அவன் சந்தைக்குச் சென்று, "வேர்க்கடலை, வேர்க் கடலை" என்று கூவிக்கொண்டிருந்தான். அதே சந்தைக்குத் தசுக்கனும் ஒரு கோணிப்பையைத் தூக்கிக் கொண்டு வந்தான். அதில் அவன் நிறையச் சருகுகளையும், குச்சிகளையும் போட்டு அவற்றிற்கு மேலே சில உருளைக்கிழங்குகளைப் பரப்பியிருந் தான். "உருளைக்கிழங்கு, உருளைக்கிழங்கு" என்று அவன் கூவிக் கொண்டிருந்தான். ஆனால் அவர்கள் இரண்டு பேர் களிடத்திலும் வியாபாரம் செய்ய யாரும் வரவில்லை. வெகு நேரம் சுற்றித்திரிந்த பிறகு எத்தனும், தசுக்கனும் சந்தையில் தற்செயலாகச் சந்தித்தார்கள். 'தசுக்கா, உன் பையில் என்ன



கொண்டு வந்திருக்கிருய்?'' என்று எத்தன் கேட்டான். ''மூட்டை நிறைய உருளைக்கிழங்கு இருக்கிறது'' என்ருன் தசுக்கன். ''என் மூட்டை நிறைய வேர்க்கடலை இருக்கிறது. இரண்டு பேரும் மூட்டைகளை மாற்றிக் கொள்வோமா?'' என்று மெல்ல ஆரம்பித்தான் எத்தன். தசுக்கன் உடனே சம்மதம் தெரிவித்தான். இரண்டு பேரும் மூட்டைகளை மாற்றிக் கொண்டு குதூகலத்தோடு அவனவன் வீட்டிற்குப் போனுர்கள்.

வீடு சென்றதும் தசுக்கன் ஆவலோடு மூட்டையை அவிழ்த்துக் கீழே கொட்டினுன். மூட்டையில் அரைப்படி வேர்க்கடலைகூட இல்லை. உடனே அவன் எத்தன் வீட்டை நோக்கிப் புறப்பட்டான். எத்தனும் இதே போல ஏமாற்றமடைந்து தசுக்கன் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான். இருவரும் பாதி வழியில் சந்தித்தார்கள். ஒருவன்மேல் மற்ருெருவன் குற்றம் சாட்டத் தொடங்கினுன். இதற்குள் நன்ருக இருட்டி விட்டது. இருட்டிலே நெடுநேரம் அவர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள்.

கடைசியில் அவர்கள் இரண்டு பேருக்கும் வாய்வலி எடுத்துக் கொண்டது. தொண்டை கம்மியது. 'தம்பி, நாம் சமாதான



மாகப் போவோம். இரண்டு பேரும் கெட்டிக்காரர்கள். அதனால் நமக்குள் இனிமேல் சண்டை வேண்டாம். நாம் இருவரும் அண்ணன் தம்பிகள் போல இருப்போம். சேர்ந்தே வேலை செய்வோம்'' என்று எத்தன் நயமாகப் பேசினான்.

''எனக்கும் அது சம்மதமே; ஆனால் என் உருளைக்கிழங்குக்கு விலை அதிகம். அதனால் நீ முதலில் எனக்கு இரண்டணாக் கொடுக்கவேண்டும். அப்படிக் கொடுத்தால்தான் எனக்கு நீ அண்ணன்'' என்று தசுக்கன் பதில் சொன்னான்.

இரண்டணாவைப்பற்றி மறுபடியும் சச்சரவு தொடங்கிற்று. பேச்சு வளர்ந்தது.

கடைசியில் எத்தன் சமாதானத்திற்கு வந்தான். ''பக்கத்திலே ஒரு பாழுங் கிணறு இருக்கிறது. அதற்குள்ளே நிறையத் தங்கமும் வெள்ளியும் இருக்கிறதாக நான் கேள்விப் பட்டிருக்கிறேன். வா, உனக்கு அந்தக் கிணற்றைக் காட்டுகிறேன்'' என்று அவன் கூறிக்கொண்டே தசுக்கனை அழைத்துச் சென்றான். இருவரும் ஒரு பாழுங் கிணற்றை அடைந்தார்கள்.

''தசுக்கா, இந்தக் கோணிப்பையில் உன்னைக்கட்டிக் கிணற்றுக்குள் விடுகிறேன். நீ உள்ளே சென்றதும் கையில் கிடைக்கிற பொருள்களையெல்லாம் இந்தப் பையில் போட்டு முதலில்

மேலே அனுப்பு. பிறகு இரண்டாம் முறையாக நான் பையை உள்ளே விடும்போது நீ அதிலேறிக் கொண்டு வந்துவிடலாம். கிடைக்கும் பணத்தை இரண்டு பேருமாகப் பங்கிட்டுக் கொள்வோம்'' என்று கூறினான் எத்தன்.

''எனக்கு இரண்டணு அதிகமாகப் பங்கிடவேணும், உருளைக்கிழங்கு விலை அதிகம்'' என்று வாதாடினான் தசுக்கன். வெகுநேரம் இதைப்பற்றி அவர்களுக்குள் விவாதம் நடந்தது. கடைசியில் எத்தன் இணங்கினான். தசுக்கனைக் கோணிப்பையில் கட்டிப் பாழுங் கிணற்றுக்குள் விட்டான்.

கிணற்றின் அடியில் சென்றதும் தசுக்கன் பைக்குள் இருந்தபடியே ஒரு காலை எடுத்து மெதுவாகக் கீழே வைத்தான். சப்பாத்திக்கள்ளி முள் நறுக்கென்று காலில் குத்தியது. அவன் நன்றாக உற்றுப் பார்த்தான். ஒரே இருட்டாக இருந்தபடியால் ஒன்றுமே தெரியவில்லை. பிறகு மெதுவாக மற்றொருகாலை எடுத்து வைத்தான். அந்தக் காலிலும் முள் நன்றாகக் குத்திற்று. அதனால் அவனுக்கு எத்தன் மேல் சந்தேகம் வந்துவிட்டது. தன்னை ஏமாற்றிக் கிணற்றுக்குள்ளேயே விட்டு விட்டுப்போக எத்தன் தந்திரம் செய்திருக்கிறான் என்று அவனுக்குத் தோன்றிற்று. அதனால் அவனும் ஒரு சூழ்ச்சி செய்ய நினைத்தான்.

அவன் கோணிப்பைக்குள் உட்கார்ந்துகொண்டே, ''அண்ணா, தங்கம் கட்டி கட்டியாக ஏராளமாகக் கிடக்கிறது!'' என்று சத்தமாகச் சொன்னான்.

''தம்பி, சத்தம் போடாதே; முதலில் தங்கக்கட்டிகளையெல்லாம் கோணிப்பைக்குள் போட்டு அனுப்பு. ஒரு கட்டியையும் விட்டுவிடாதே'' என்று எத்தன் பதில் சொன்னான்.

கிணற்றுக்குள் தங்கம் இருக்குமென்று அவன் முதலில் நினைக்கவில்லை. தசுக்கனை ஏமாற்றவே அவனைக் கிணற்றில் கட்டிவிட்டான். ஆனால் இப்பொழுது தசுக்கன் கூறியதைக் கேட்டதும் தங்கத்தின் மீதிருந்த ஆசையால் அவன் அதை உண்மையென்றே நம்பிவிட்டான்.

தசுக்கன் பைக்குள்ளேயே உட்கார்ந்து கொண்டு கொஞ்ச நேரத்திற்குப் பிறகு, ''அண்ணா, தங்கக் கட்டியெல்லாம் பையில் கட்டியாகி விட்டது, மேலே இழு''என்றான். எத்தன் ஆவலோடு

பையை மேலே இழுத்துக்கொண்டான். பிறகு பையைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு வேகமாகப் புறப்பட்டான். தசுக்கன் ஒழிந்தான் என்பது அவனுடைய எண்ணம். அவனைத் தந்திரமாக ஏமாற்றி விட்டதை நினைத்து நினைத்து அவன் அடிக்கடி வாய்விட்டுச் சிரித்துக்கொண்டே போனான்.

நடக்க நடக்கக் கோணிப்பையின் பாரமும் அதிகமாவது போல அவனுக்குத் தோன்றிற்று. அவனால் அதற்குமேல் பையைத் தூக்கிக் கொண்டு போக முடியவில்லை. பைக்குள் எவ்வளவு தங்கம் இருக்கிறது என்று பார்க்கவேண்டும் என்ற ஆசையும் அதிகமாயிற்று. யாராவது வருகிறார்களா என்று அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். ஒரே இருட்டாக இருந்ததால் கண்ணுக்கு யாருமே தெரியவில்லை. ஓரிடத்தில் புதராகச் செடிகளும் மரங்களும் இருந்தன. அவ்விடத்தில் அவன் கோணிப்பையை மெதுவாகக் கீழே இறக்கி வைத்தான். "அப்பா! ரொம்பக் கனம். எனக்கு நிறையத் தங்கம் கிடைத்து விட்டது. தசுக்கனை ஏமாற்றிவிட்டேன்" என்று சொல்லிக் கொண்டே எத்தன் பையை அவிழ்த்தான்.

"அண்ணா! பயப்படவேண்டாம். பங்குக்கு நான் இருக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே தசுக்கன் பையைவிட்டு வெளியே வந்தான். இரண்டணுக் கொடுக்கவேண்டும் என்று அவன் மறுபடியும் வாதாடினான். நெடுநேரம் இருவரும் கூச்சலிட்டனர்.

அவர்கள் இப்படிப் போராடிக் கொண்டிருந்த இடத்திற்குப் பக்கத்திலே ஒரு சுடுகாடு இருந்தது. அங்கு பேய்கள் நிறைய இருந்தன. அவைகளுக்கு இவர்கள் போடும் கூச்சல் நன்றாகக் கேட்டது. என்ன நடக்கிறது என்று பார்க்க இரண்டு குட்டிப் பேய்கள் ஆசைகொண்டன. பதுங்கிப் பதுங்கி அவை மெதுவாகத் தசுக்கனும் எத்தனும் போராடிக் கொண்டிருந்த இடத்திற்கே வந்துவிட்டன. ஒரே இருட்டாக இருந்தபடியால் ஒருவரும் அவற்றைக் கண்டு கொள்ள முடியவில்லை. அதனால் குட்டிப் பேய்கள் இரண்டும் தைரியமாக அவர்கள் பக்கத்திலேயே நெருங்கி வந்தன.

அந்தச் சமயத்தில் தசுக்கன் எத்தனை விடாமல் பிடித்துக் கொள்ள விரும்பித் தன்னுடைய கைகளை நீட்டினான். பக்கத்

திலே வந்திருந்த குட்டிப்பேய் ஒன்றின் வலதுகை அவன் பிடியில் அகப்பட்டது. இருட்டில் அந்தக் கை யாருடையது என்று தசுக்கனுக்குத் தெரியவில்லை. எத்தன் கைதான் என்று நினைத்து அவன் அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். "ஓடப் பார்க்கிறாயா? அது முடியாது; கையை விடவே மாட்டேன்" என்று அவன் உரத்துக் கூவினான். அந்தச் சமயத்தில் இரண்டு பேய்கள் அங்கேயிருப்பது எத்தனுக்குத் தெரிந்துவிட்டது. அவன் நடுங்கிக்கொண்டே ஒரு மரத்தின் பின்னால் போய் மறைந்துகொண்டு என்ன நடக்கிறது என்று வேடிக்கை பார்க்கத் தொடங்கினான். தசுக்கன் குட்டிப் பேயின் கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டிருந்தான். கையிலகப் பட்டகுட்டிப்பேய் பயந்து நடுங்கிக்கொண்டிருந்தது. அதற்குச் சத்தம் போடவும் தைரியம் வரவில்லை.

மற்றொரு குட்டிப்பேய் பயந்து ஓட்டம் பிடித்தது. சுடு காட்டிலிருந்த ஆயிரம் பேய்களிடத்திலும் அழுதுகொண்டே நடந்த விஷயத்தை அது சொல்லிற்று. எல்லாப் பேய்களும் பயந்து அழத் தொடங்கிவிட்டன. அப்பொழுது ஒரு கிழப்பேய் முன்னால் வந்து, "இப்பொழுது அழுது கொண்டிருப்பதால் பயனில்லை. அந்த ஆள் இரண்டணாத்தானே வேண்டும் என்று கேட்கிறான்? நாம் ஒவ்வொருவரும் ஒரு இரண்டணா கொடுத் துக் குட்டிப்பேயை மீட்டு வருவோம்" என்றது. "ஐயோ, அவன் எல்லோரையும் சேர்த்துப் பிடித்துக்கொள்வான்; நாங்கள் வரமாட்டோம்" என்று மற்ற பேய்களெல்லாம் ஒரே மூச்சில் கூறின.

"அவனுக்குப் பணந்தான் வேண்டும். பணத்தைக் கொடுத்து விட்டால் அவன் நம்மை ஒன்றும் செய்யமாட்டான். ஒவ்வொருவரும் இரண்டணா எடுத்துக் கொள்ளுங்கள்" என்று தைரியம் சொல்லிற்று கிழப்பேய்.

கடைசியாக எல்லாப் பேய்களும் அரை மனதோடு ஒப்புக் கொண்டன. "கிழப்பேய்தான் பணத்தை மூட்டையாகக் கட்டிக் கொண்டு முன்னால் செல்லவேண்டும்" என்று மற்ற பேய்க ளெல்லாம் சொல்லவே கிழப்பேயும் அதற்குச் சம்மதித்தது. கிழப்பேய் முன்னால் செல்ல மற்ற பேய்களெல்லாம் நடுங்கிக்

கொண்டே பின்னல் சென்றன. அவைகள் பக்கத்தில் வரும் போது தசுக்கனுடைய குரல் கேட்டது. "விடவே மாட்டேன்; பணங் கொடுத்தால்தான் கையை விடுவேன்" என்று அவன் பழையபடி சத்தம் போட்டுச் சொல்லிக் கொண்டிருந்தான்.

"ஐயா, இந்தாருங்கள் பணம்; ஆயிரம் பேய்களும் ஆளுக்கு இரண்டணுக் கொண்டுவந்திருக்கிறோம். குட்டிப்பேயை விட்டுவிடுங்கள்" என்று கிழப்பேய் கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டது.

"பேயா?" என்று சொல்லிக் கொண்டே தசுக்கன் மூர்ச்சை போட்டுக் கீழே விழுந்தான். தப்பித்ததே போதும் என்று குட்டிப் பேய், "வாருங்கள், ஓடிப்போய்விடுவோம்" என்று சொல்லிக்கொண்டே ஓட்டம் பிடித்தது. மூட்டையைப் போட்டுவிட்டுக் கிழப்பேயும் மற்ற பேய்களும் பின்னலேயே ஓட்டம் பிடித்தன. ஆயிரம் பேய்கள் வந்திருக்கின்றன என்று தெரிந்ததும் மறைந்து நின்றிருந்த எத்தனும் மூர்ச்சை போட்டு விழுந்து விட்டான்.

வெகுநேரம் கழித்து எத்தனுக்கும் தசுக்கனுக்கும் மூர்ச்சை தெளிந்து சுயநினைவு வந்தது. ஆனல் ஒருவன்கூடக் கண்ணைத் திறக்கவில்லை. கண்ணை மூடிக்கொண்டு இரண்டு பேரும் பிணம்போலக் கிடந்தார்கள்.

இரவு நீங்கிப் பொழுது கிளம்பி நன்றாக வெய்யில் உறைத்த பிறகுதான் எத்தன் மெதுவாக ஒரு கண்ணில் பாதியைத்திறந்து பார்த்தான். பேய்கள் ஒன்றும் இல்லை. தசுக்கன் மாத்திரம் பிணம்போலக் கிடந்தான். அவனுக்குப் பக்கத்திலே கிடந்த பணமூட்டையும் எத்தன் கண்ணில் பட்டது. உடனே அவன் எழுந்து பணமூட்டையைத் தூக்கிக்கொண்டு ஓட்டம் பிடித்தான். தசுக்கனுக்குத் தெரியாமல் எங்காவது போய்விட வேண்டுமென்பது அவன் எண்ணம். ஆனல் அவன் எண்ணம் நிறைவேறவில்லை. அதுவரையிலும் தசுக்கனும் அரைக் கண்ணல் மெதுவாகப் பார்த்துக்கொண்டு தானிருந்தான். அதனல் அவன், "அண்ணு! பேய் எனக்குத்தான் பணம் கொடுத்தது. பணமூட்டையை வைத்துவிட்டுப் போ" என்று கூறிக்கொண்டே எழுந்து ஓடி வந்தான். எத்தன் முன்னல் ஓடினன். தசுக்கன் பின்னல் தொடர்ந்தான். "பிடி, பிடி

விடாதே; எனக்குப் பேய் கொடுத்த பணத்தை அவன் தூக்கிக் கொண்டு போகிருன் '' என்று கூறிக்கொண்டே அவன் ஓடி வந்தான். '' பேய் எனக்குத்தான் கொடுத்தது '' என்று கூவிக் கொண்டே எத்தன் முன்னுல் ஓடினுன்.

''பேயாவது பணங்கொடுக்கிறதாவது – இவர்கள் இரண்டு பேரும் பயித்தியம் பிடித்தவர்கள் '' என்று மக்களெல்லோரும் கூறிக்கொண்டே பேசாமல் வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தார்கள்.

கடைசியில் ஒரு தனியிடத்திற்கு எத்தன் வந்து சேர்ந்தான். அதற்குமேல் அவனுல் ஓட முடியவில்லை. அவனுக்கு மூச்சுத் திணறிற்று. அவன் அப்படியே களைத்துப் போய்த் தரையில் உட்கார்ந்தான். தசுக்கனும் அவன் பின்னுலேயே வந்து சேர்ந்தான். அவனுக்கும் பெருமூச்சு வாங்கிற்று.

கொஞ்ச நேரம் இரண்டு பேராலும் பேச முடியவில்லை. பிறகு எத்தன், '' தம்பி, இனிமேல் நாம் ஒருவரையொருவர் ஏமாற்றுவதை விட்டுவிடுவோம்'' என்று சொன்னுன். ''அப்படி யானுல் சரி, பேய் கொடுத்த பணம் எனக்குத்தான் சொந்தம். ஆகவே அதை நீ என்னிடம் கொடு '' என்றுன் தசுக்கன்.

'' தம்பி, பாதியாவது எனக்குக் கொடு '' என்று சொல்லிக் கொண்டே எத்தன் மூட்டையை அவிழ்த்துக் கொட்டினுன். மூட்டையிலிருந்து உடைந்த ஓடுகள்தான் சலசலவென்று விழுந்தன. இருவரும் ஏமாற்ற மடைந்தனர்.

அது முதல் இரண்டு பேரும் ஒருவரை ஒருவர் ஏமாற்று வதை நிறுத்திவிட்டனர். ஏமாற்றுவதால் யாருக்கும் நன்மை ஏற்படாது என்று அவர்களுக்குத் தெரிந்துவிட்டது. பிறகு இரண்டு பேருமாகச் சேர்ந்து நாணயமாக வியாபாரம் செய்து வாழத் தொடங்கினுர்கள்.



# அற்புதச் செடிகள்

முன்னெரு காலத்தில் ஓர் ஏழைக் கிழவன் இருந்தான். அவனுக்கு ஒரு மகனும் ஒரு மகளும் உண்டு. மூன்று பேரு மாகச் சேர்ந்து காலையிலிருந்து மாலைவரை மூங்கிலைக் கிழித்து ஒழுங்கு செய்து, கூடை, முறம் முடைவார்கள். அவற்றை விற்றுக் கிடைக்கும் பணத்தைக்கொண்டு அரிசி பருப்பு முதலி யவை வாங்குவார்கள். உணவு சமைப்பார்கள். ஆனுல் அந்த உணவு மூன்றுபேருக்கும் போதுமான அளவு இருக்காது. அதனுல் அவர்கள் இரவிலும், நீண்டநேரம் கூடை, முறம் முடைந்து இன்னும் கொஞ்சம் அதிகமாகப் பணம் சம்பாதிக்க வேண்டியதாயிற்று.

அந்தக் காலத்திலே விளக்கே கிடையாது. எண்ணெய் தரும் வித்துக்களும் உலகத்தில் இல்லை. அதனுல் அவர்கள் விறகுக்கட்டைகளை எரியவிடுவதால் உண்டாகும் வெளிச் சத்தில்தான் வேலை செய்ய வேண்டியிருந்தது. அவ்வாறு ஒவ் வொரு இரவிலும் வேலை செய்வதால் கண் ஒளி மங்கி அவர்கள் கஷ்டப்படவேண்டியிருந்தது. அவர்களைப் போலவே மற்ற ஏழைமக்களும் துன்பப்பட்டனர்.

மேலும் அந்தக் காலத்திலே பருத்திச்செடியே உலகத்தில் இல்லை. அதனுல் நூலால் நெய்த துணியும் இல்லை. மக்களெல் லோரும் விலங்குகளின் தோலை இடுப்பில் கட்டிக்கொண்டிருந் தார்கள். அதனுல் இரவில் வேலை செய்யும்போது குளிரால் உடம்பு நடுங்கிற்று.

ஒரு நாள் கிழவனும் அவன மக்களும் வழக்கம்போல் இரவில் நெடுநேரம் வேலை செய்து கொண்டிருந்தனர். மங்கிய வெளிச்சததில் உற்றுற்றுப் பார்த்து அவர்களுடைய கண்கள் வீங்கிப்போயின; பார்வையும் மங்கிற்று.



“இரவிலே நிலாவும் சூரியனைப்போல நன்ருகப் பிரகாசிக்கக் கூடாதா? அப்படிப் பிரகாசித்தால் நமக்கு நல்ல வெளிச்சமும் கிடைக்கும். குளிரின் தொல்லையும் இருக்காது” என்று மகள் கூறினுள்.

“நிலா எல்லா இரவுகளிலும் ஒரேமாதிரியாக முழுவெளிச் சத்தோடு பிரகாசிக்கக் கூடாதா? அதுவும் இல்லையே! நிலாவிடம் சொல்லி நன்ருகப் பிரகாசிக்கும்படி செய்யவேண்டுமென்று எனக்கு ஆசையாக இருக்கிறது” என்ருன் மகன்.

“வெகுதூரத்திலே மேகத்தை முட்டி அதற்கு மேலேயும் உயர்ந்து நிற்கும்படியான ஒரு மலை இருக்கிறதாம். அந்த மலையின் உச்சியிலே வெண்பனிச் சிகரத்திலே ஒரு மகான் இருக்கிருராம். அவர் நிலா வரும் போதெல்லாம் அதற்குள்ளே புகுந்து விளையாடிவிட்டுத் திரும்புவாராம். அவரைக் கண்டு கேட்டுக்கொண்டால் ஒரு வேளை அவர் நிலாவை நன்ருகப் பிரகாசிக்கும்படி செய்யலாம்” என்று கிழவன் சொன்னுன்.

உடனே மகன், “அப்பா, அப்படியானுல் நான் இன்றே புறப்பட்டு அவரைச் சந்திக்கப்போகிறேன்” என்று உற்சாகத் தோடு சொல்லிக் கொண்டு எழுந்தான். “மகனே, அந்த வெள்ளிப் பனிமலை வெகுதூரத்தில் இருக்கிறது. அதன் அடி வாரத்திற்குப்போய்ச் சேருவதே மிகவும் கஷ்டம். அதன் உச்சிக்குப் போய்ச் சேருவது என்ருல் வழியிலே எத்தனையோ

ஆபத்துக்கள் ஏற்படும். அது சுலபமான காரியம் அல்ல'' என்று தந்தை எச்சரிக்கை செய்தார்.

''உலகத்திலே மக்களெல்லாம் இரவில் நல்ல வெளிச்ச மில்லாமல் துன்பப்படுகிருர்கள். அவர்களுடைய துன்பத்தைப் போக்குவதற்கு நான்- எவ்விதமான கஷ்டத்தையும் அனுபவிக் கத் தயார். இந்த முயற்சியிலே என் உயிர் போவதானுலும் கவலைப்படமாட்டேன். நான் இப்பொழுதே புறப்படுகிறேன். அப்பா, மகிழ்ச்சியோடு என்னை ஆசீர்வாதம் செய்து அனுப்புங்கள்'' என்று மகன் ஆர் வத்தோடு சொன்ஞன். அவனுடைய உற்சாகத்தைக் கண்டு தந்தையும் அவனை ஆசீர்வாதம் செய்து அனுப்பினுர்.

மகன் உடனே புறப்பட்டான். எத்தனையோ ஆறுகளை நீந்தி நீந்திக் கடந்தான். வனங்களுக் குள்ளெல்லாம் துணிச்சலோடு புகுந்து சென்ருன். வழியிலே எத்தனையோ உயரமான மலைகள்



இருந்தன. அவற்றின் மீதெல்லாம் ஏறி இறங்கி வடக்குத் திசையை நோக்கிப் போய்க் கொண்டேயிருந்தான். கடைசியில் வெள்ளிப்பனிமலை தோன்றிற்று. அதன்மேலே ஏறினான். அவன் கால்கள் தேய்ந்துபோயின. பாதங்களில் ரத்தம் பீறிட்டு ஒழுகிற்று. பிறகு அவனால் கால்களை உபயோகித்து நடக்கவே முடியவில்லை. அவன் கைகளையும் முழங்கால்களையும் தரையில் ஊன்றித் தவழ்ந்து தவழ்ந்து செல்லலானான். கைகளிலும், முழங்கால்களிலும் தோல் உரிந்து ரத்தம் பெருக்கெடுத்தது. அவன் தன் அரையில் கட்டியிருந்த தோலைக் கிழித்துக் கைகளிலும், முழங்கால்களிலும் கட்டிக்கொண்டு மேலும் தவழ்ந்து செல்லத் தொடங்கினான். மேலே ஏறஏற மரஞ்செடிகளே தென்படவில்லை. ஒரே வெளுப்பாகப் பனியே மலையாக நின்றது. அதன் மேலும் அவன் அச்சமில்லாமல் தவழ்ந்து சென்றான். கடுங்குளிர் உடம்பை நடுக்கிற்று. அவன் மனம் தளரவே இல்லை.

இப்படி அவன் விடாமுயற்சியோடு சென்றதன் பயனாகக் கடைசியில் மலைஉச்சியிலிருக்கும் மகானைத் தரிசிக்க முடிந்தது. அவருடைய கண்கள் ஏதோ ஒருவித ஒளியோடு ஜொலித்தன. சிறுவன் அவரை அணுகி வணங்கினான்.

''ஐயா, உலகத்திலே மக்களெல்லாம் இரவு நேரங்களிலே வெளிச்சமில்லாமல் துன்பப்படுகிறார்கள். சூரியனைப்போலவே நிலாவும் இரவில் நன்றாகப் பிரகாசித்தால் அத் துன்பமெல்லாம் நீங்கிவிடும். நிலா அப்படிப் பிரகாசிக்கும்படி நீங்கள் தான் செய்ய வேண்டும். உங்களைக் கேட்டுக்கொள்வதற்காகவே நான் மிகுந்த சிரமப்பட்டு இங்கு வந்திருக்கிறேன்'' என்றான் பையன்.

பையனுடைய உடம்பெல்லாம் காயம் இருப்பதையும் அவன் மிகவும் இளைத்து மெலிந்திருப்பதையும் அந்த மகான் கூர்ந்து கவனித்தார். பையனுடைய ஆர்வம் அவருக்கு நன்றாகத் தெரிந்தது. ''பையா! உன்னுடைய முயற்சி மிகவும் நல்லதுதான். நான் உனக்காக நிலாவைக் கேட்டுப் பார்க்கிறேன்'' என்று சொல்லிவிட்டு நிலா மேலே வருகின்ற சமயம் பார்த்து அதற்குள்ளே புகுந்து மறைந்தார்.

கொஞ்ச நேரத்திலே அவர் மலையுச்சிக்குத் திரும்பி வந்தார். "பையா, நீ விரும்புகிறதைப்போல் நிலாவால் பிரகாசிக்க முடியாதாம். அதற்குச் சூரியனைப்போல அவ்வளவு சக்தி இல்லையாம். எல்லா இரவிலுங்கூட ஓரேமாதிரியாகப் பிரகாசிக்க முடியாதாம். சில இரவுகளில் சமுத்திரத்திற்குப்போய் முகத்தை நன்ருகக் கழுவி, சுத்தம் செய்துகொள்ளவேண்டுமாம். இல்லாவிட்டால் அழுக்குப்படிந்து இப்பொழுதுள்ள ஒளியும் மங்கிப்போகுமாம்" என்று அவர் சொன்னுர்.

பையனுடைய முகத்திலே விசனம் படர்ந்தது. "ஐயா, நீங்கள்தான் உலகத்து மக்களுடைய துன்பத்தைப்போக்க ஒரு வழி சொல்லவேண்டும். இரவிலே அவர்களுக்கு நல்ல வெளிச்சம் கிடைக்கவேண்டும்" என்று கெஞ்சிக்கெஞ்சிக் கேட்டான். மகான் சற்று நேரம் யோசனை செய்துவிட்டு, "மக்களுக்கு இரவில் ஒளி கிடைக்கவேண்டுமானுல் அதற்கு எண்ணெய் தரும் செடியைப் புதிதாக உலகத்திலே உண்டாக்கவேண்டும். யாராவது ஒரு மனிதன் அவ்விதச் செடியாக மாறுவதற்குத் தயாராக இருந்தால் அந்தச் செடியை உண்டாக்க முடியும். தன்னையே தியாகம் செய்துகொள்ளும் மனிதன் எவனுவது இருக்கிருனு?" என்ருர் அந்த மகான்.

உடனே, "நானே தயாராக இருக்கிறேன். என் வாழ்வு பெரிதல்ல. மக்களுடைய துன்பம் நீங்கினுல் போதும்" என்று ஆர்வத்தோடு பையன் பதில் சொன்னுன். பையனுடைய ஆர்வத்தைக் கண்டு மகிழ்ச்சியடைந்த மகான் அவனிடம் ஒரு முத்தைக் கொடுத்தார். "இந்த முத்தை வாயில் போட்டு விழுங்கினுல் நீ எண்ணெய்வித்துச் செடியாக மாறிவிடுவாய்" என்ருர் மகான். பையன் கொஞ்சமும் தயக்கமின்றி அந்த முத்தை வாயில் போட்டு விழுங்கினுன்.

உடனே அவன் ஆமணக்குச் செடியாக மாறிப் பூத்துக் காய்த்துக் குலுங்கினுன்.

வீட்டை விட்டு இப்பையன் புறப்பட்டுவந்து பத்து மாதங்களாயின. அதனுல் கிழவனும் அவன் மகளும், "என்ன ஆயிற்ருே?" என்று கவலையில் மூழ்கினுர்கள். ஒரு நாள் மகள் தன் தந்தையைப் பார்த்து, "அப்பா! நான் அந்த வெள்ளிப்

பனிமலைக்குப் போய்ப் பார்த்து வருகிறேன். அந்த மகானைப் பார்த்து உதவிசெய்யும்படி கேட்டுக்கொண்டு முடியுமானால் அண்ணனையும் அழைத்து வருகிறேன்'' என்றாள்.

இவ்வாறு கூறித் தந்தையின் அனுமதி பெற்றுக்கொண்டு அவளும் புறப்பட்டாள். அண்ணனைப்போலவே அவளும் மிகுந்த சிரமப்பட்டுக் கடைசியில் வெள்ளிப் பனிமலையின் உச்சிக்குச் சென்று மகானைக் கண்டாள். "ஐயா! இரவிலே நல்ல வெளிச்சமில்லாமல் மக்களெல்லாம் துன்பப்படுகிறார்கள். தயவு செய்து சூரியனைப் போலவே நிலாவை நன்றாகப் பிரகாசிக்கச் சொல்லுங்கள். நீங்கள் சொன்னால் அது நடக்கும்'' என்று அவள் பணிவோடு கேட்டுக்கொண்டாள்.

"மகளே, உன்னைப்போலத்தான் முன்பு ஒரு சிறுவன் இங்கே வந்து இதே வரத்தைக் கேட்டான். நானும் நிலாவிடம் வேண்டினேன். ஆனால் நிலாவால் அது முடியாது என்று தெரிந்தது'' என்றார் அவர்.

"பிறகு என்ன செய்யலாம்? எப்படியாவது எனக்கொரு வழி சொல்லுங்கள்'' என்று கண்ணீர் சிந்திக்கொண்டே அந்தப் பெண் கேட்டாள்.

"அதோ பார், அங்கே இருக்கும் ஆமணக்குச் செடியின் விதையிலே எண்ணெய் இருக்கிறது. அதைக்கொண்டு விளக்கு ஏற்ற முடியும். முன்னால் இங்கு வந்த பையன்தான் மக்களின் துன்பத்தைப் போக்க இப்படி ஆமணக்குச் செடியாக மாறியிருக்கிறான்'' என்று மகான் தெரிவித்தார். அந்தப் பெண் அந்தச் செடியிடம் சென்று அதைக் கட்டியணைத்துக்கொண்டு, "அண்ணா! நீ நல்ல காரியம் செய்தாய்'' என்று கூறி மகிழ்ந்தாள். பிறகு மகானைப் பார்த்துத் தானும் இப்படி ஏதாவது நல்ல காரியம் செய்ய ஆசைப்படுவதாகச் சொன்னாள்.

"நீ பருத்திச் செடியாக மாறத் தயாரா?'' என்று கேட்டார் மகான். "தயார்'' என்று உடனே பதில் சொன்னாள் அவள். அவளுடைய உற்சாகத்தைக் கண்டு மகிழ்ந்த மகான் அவளிடமும் ஒரு முத்தைத் தந்தார். அதை விழுங்கும்படி அப்பெண்ணிடம் கூறினார். அவளும் உடனே முத்தை விழுங்கினாள்.

அடுத்த விநாடியில் அவள் பருத்திச்செடியாக மாறிப் பூத்துக் காய்த்து விளங்கினாள்.

மகள் புறப்பட்டுச் சென்று பத்து மாதம் ஆகியதைக் கிழவன் அறிந்து அவனும் வெள்ளிப் பனிமலையை நோக்கி நடந்தான். அவனும் பல துன்பங்களை அனுபவித்தாலும் மனம் தளராமல் மலையின் உச்சியை அடைந்தான். மகானைக் கண்டு வணங்கினான். தன் மகனும் மகளும் அங்கு வந்து மகானை வேண்டியதையும், பிறகு அவர்கள் ஆமணக்குச்செடியாகவும், பருத்திச்செடியாகவும் மகிழ்ச்சியோடு மாறியதையும் மகானிடமிருந்து தெரிந்துகொண்டான்.

"ஐயா, நானும் உலகத்துக்காக ஏதாவது நல்லது செய்ய ஆசைப்படுகிறேன். எனக்கும் ஒரு முத்துக் கொடுங்கள்" என்று கேட்டுக் கொண்டான். அவனைப் பார்த்து, "என்னிடம் இனி முத்து ஒன்றும் இல்லை. அது அவசியமும் இல்லை. நீ வேறு வகையில் உலகத்துக்கு நல்ல காரியம் செய்யலாம். இந்த ஆமணக்கு விதைகளையும், பருத்தி விதைகளையும் எடுத்துச் சென்று உலகத்திலேயே பல இடங்களில் முளைக்க வை. அவற்றின் உதவியால் மக்களுக்கு விளக்கும், நல்ல ஆடையும் கிடைக்கும்" என்று மகான் மொழிந்தார்.

அவர் கூறியவாறே விதைகளையெடுத்துக் கொண்டு அவரை வணங்கி விட்டுத் திரும்பினான் கிழவன். பல இடங்களிலே விதைகளைப் போட்டுச் செடிகளை வளர்க்க ஏற்பாடுசெய்தான்.

அன்று முதல் மக்களுக்கு இரவிலே எண்ணெய் விளக்கின் உதவியால் நல்ல வெளிச்சமும் உடம்பைக் குளிரிலிருந்து காப்பாற்றிக்கொள்ளப் பருத்தியின் உதவியால் வெதுவெதுப்பான ஆடைகளும் கிடைத்தன.

